உ



# இதயக் கோயில்

## (நடராஜர் கோயில், சிதம்பரம்)

தலவரலாறு


இயற்றியவர்

ஐ. த. ரா. கணேச தீக்ஷிதர்

(தேவஸ்தான டிரஸ்டி)





85, தெற்கு வீதி : : சிதம்பரம்

முதற் பதிப்பு — 1969
ஐந்தாம் பதிப்பு — 1986

உ
சிவமயம்

# பதிப்புரை

பக்திமான்களே, அன்பர்களே, பூலோக கைலாச மாகிய இச் சிதம்பரத் தலத்தைப்பற்றி விவரிப்பதற்கு ஆயிரம் நாவைப் படைத்த ஆதிசேஷனாலும் முடியாது என்றால் நம்மால் முடியுமோ! ஆயினும் மூர்த்தி, தலம், தீர்த்தம் இவைகளைப் பற்றி முன்னோர்கள் பல நூல்களில் எழுதிவைத்தவைகளைப் பலரும் படித்து அறியக் கூடியனவா யில்லாமலும் இருக்கின்றன. அவைகளைச் சேர்த்துச் சுருக்கமாகவும், சிதம்பரம் வந்து சுவாமி தரிசனம் செய்பவர்களுக்கு வழிகாட்டியாகவும், உபயோக மாகும்படி இந்தப் புத்தகத்தை எழுதி வெளியிட்டிருக் கிறேன். ஆனாலும், மேலே சொல்லியபடி இன்னும் ஏதாவது சேர்க்க வேண்டுமானாலும், இதைக் கண்ணுற்ற அன்பர்கள் தெரியப் படுத்தினால் கூடியவரையில் அடுத்த பதிப்பிலேயே சேர்க்கவும் முயற்சித்து, மறுபதிப்புகளிலும் சேர்க்க கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்த நான்காம் பதிப்பில் அநுபந்தமாக பிரம்மஸ்ரீ சிவசங்கரதிக்ஷிதர் அவர்கள் ஸ்ரீசபாநாதர் பேரில் பாடிய கீர்த்தனங்கள் ஐந்து சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நான்கு பதிப்புகளையும் எனக்காகக் குறைந்த செலவில் புத்தகத்தை அச்சிட்டுக் கொடுத்து உதவிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலைத் டிரஸ்டி திரு. தி. க. இராஜேஸ்வரன், B. A.. அவர்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்ய முடியும்! ஆனால் ஸ்ரீ நடராஜரிடத்தில் அவருடைய மேலான க்ஷேமத்தை பிரார்த்திக்கிறேன்.

சிதம்பரம்
13 - 8 - 1980

இங்ஙனம்
ஐ. த. ரா. கணேசதீக்ஷிதர்

# சிறப்புரை

கோயில் என்பது பொதுவாகக் கொள்ளுமிடத்து எல்லாத் தேவாலயங்களையும் குறிக்கும்; சிறப்பாகக் கருதுங்கால் சைவர்களுக்குச் சிதம்பரமும் வைணவர்களுக்கு ஸ்ரீரங்கமும் என்ப. சைவர்கள் அவ்வாறு கொள்வதற்குக் காரணம் என்னை எனின், மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றாலும் மேன்மையாகக் கருதப்படுவது சிதம்பரமே.

இத்தல மூர்த்தி ஓம் என்னும் பிரணவத்தின் வடிவாக நின்று நாதாந்தக் கூத்தாடும் நடராஜப் பெருமான். ஐந்தெழுத்துச் சொரூபியாக விளங்கும் நடராஜப் பெருமானின் திருக்கூத்துப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலையும் உணர்த்துகின்றது.

கருணையே உருவான நடராஜப் பெருமான் இன்ப அநுபவமான அழகிய வடிவத்தில் சர்வலோகமும் தோன்றி மறைதற்குக் காரணமான ஞானகாயமான திருச்சிற்றம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் புரியும் கோயிலையுடைய சிறப்புப் பெற்றதாகும் சிதம்பரத்தலம். உலகம் விராட் புருடன் வடிவம்; திருவாரூர் அதன் மூலாதாரம்; திருவானைக்கா கொப்பூழ்; திருவண்ணாமலை மணிபூரகம்; திருக்காளத்தி கண்டம்; காசி புருவ மத்தியம்; சிதம்பரம் இருதயம் என்பர். உலகம் தோன்றிய காலம் முதற் கொண்டே நடைபெறும் ஆனந்தத் தாண்டவத்தை நடராஜப் பெருமான் அடியார் பொருட்டு இருதய ஸ்தானமான சிதம்பரத்தில் ஆடிக் காட்டி அருள்கிறார்.

பஞ்சபூத ஸ்தலங்களில் ஆகாயத் தலமாக விளங்குவது சிதம்பரமே.

சைவ உலகத்தில் தனிச் சிறப்பு வாய்ந்த சிதம்பரத்தில் விளங்கும் தீர்த்தங்கள் பத்தாம். அவை சிவகங்கை, குய்ய தீர்த்தம், புலிமடு, வியாக்கரபாத தீர்த்தம், ஆனந்த தீர்த்தம், நாகசேரி, பிரம தீர்த்தம், சிவப்பிரியை, திருப்பாற்கடல், பரமானந்த கூபம் என்பன. இவற்றுள் சிவகங்கை சிவவடிவம் என்று சிதம்பர மான்யம் கூறும். சிதம்பர மூர்த்தி, தல, தீர்த்த விசேஷத்தைப் பின் வரும் அடிகள் நன்குணர்த்தும்.

"மூர்த்தி அம்பலக் கூத்தனது உருவே"
"ஏத்த ருந்தலம் எழிற்புலி யூரே"
"தீர்த்தம் என்பது சிவகங் கையே" — குமரகுருபரர்

சிதம்பரத்தைப் பற்றி வடமொழியில் சாந்தோக்கியம் கைவல்யம் என்னும் உபநிஷத்துக்களும், சிவ ரகசியம் சூதசம் ஹிதை, சிதம்பர மான்மியம், புண்டரிகபுர மான்மியம், ஏமசபா மான்மியம் முதலிய நூல்களும், தமிழிற் கோயிற்புராணம், சிதம்பர புராணம், சபாநடேச புராணம், புலியூர்ப் புராணம், தில்லைத் திருவாயிரம் முதலிய பல நூல்களும் கூறுகின்றன. இவைகள் எல்லாம் பழமை வாய்ந்த அரிய நூல்கள்.

அண்மையில் வசன ரூபமாக வெளிவந்துள்ள நூல்கள் பல. அவற்றுள் சில ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன.

மேற் கூறிய நூல்கள் பெரும்பாலும் சிதம்பரத்தின் பெருமையையும் நடராஜப் பெருமானின் மகிமையையும் விதந்தோதிச் செல்கின்றன, நடராஜப்பெருமான் திருக் கோயிலின் உள் அமைப்பையும் அதன் முறையையும் விசேஷத்தையும் விளங்கச் செய்து, நடராஜப் பெரு மானைத் தரிசிக்க வரும் பக்தர்கள் தமக்கு வழி காட்டி யாகக் கொண்டு, எளிதில் அறியக் கூடியவாறு எழுதப் பட்ட நூல்கள் இல்லை என்றே சொல்லலாம். அப்பெருங் குறையைத் தீர்க்க முன்வந்துள்ளார் பிரம்மஸ்ரீ ஐ. த. ரா. கணேச தீக்ஷிதர் அவர்கள். தரிசனத்துக்கு வரும் மக்களின் தகுதி யறிந்து, அதற்குத் தக்கவாறு "இதயக் கோயில்" என்னும் பெயரிட்டு அரியதோர் நூலொன்று எழுதி வெளியிட்டுள்ளார். இந்நூலின் பெயர் மாத்திரையானே இஃதோர் கருத்துச் செறிந்த வெளியீடு எனத் தெள்ளிதின் உணரலாம். இதன் நடை சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்னும் அழகு பொதித்து, எடுத்தோதும் விஷயங்களை எவரும் எளிதில் அறிந்து கொள்ளக் கூடியவாறு காணப்படுகின்றது. சிதம்பரக் கோயிலின் தன்மையையும் முறையையும் மகத்துவத் தையும் இதன் வாயிலாக மக்கள் நன்குணர்ந்து பயன டையக் கூத்தப்பிரான் திருவருள் கூர்வாராக!

**தி. க. இராசேசுவரன்**, B.A.
தர்மகர்த்தா, ஆறுமுக நாவலர்
சைவப்பிரகாச வித்தியாசாலை

சிதம்பரம்
11 - 12 - 68



உ

ஸ்ரீ சிவமயம்

ஸ்ரீ சிவகாம சுந்தரி அம்பாள் சமேத
ஸ்ரீ மதானந்த நடராஜமூர்த்தி துணை.

# இதயக் கோயில்
# (தில்லை ஸ்தல வரலாறு)

## முன்னுரை

இவ்வுலகமானது நம்முடைய சரீரத்தைப் போன்ற, விராட் புருஷனுடைய சரீரமாக உள்ளது. அப்படியுள்ள உலகத்தில், பரத கண்டத்தில் விந்திய மலைக்குத் தெற்கிலும், கன்னியா குமரிக்கு வடக்கிலும் உள்ள தேசம் தென்தேசம். இந்தத் தென்தேசத்தில்தான் பல க்ஷேத்திரங்களும், பல கலைகளும் அன்று முதல் என்றும் வளர்ந்து கொண்டிருக்கின்றன. அப்படியுள்ள தென்தேசத்தில், மற்ற க்ஷேத்திரங்களிலும் மிகச் சிறப்பானதும், கொள்ளிடம் என்கிற காவிரியின் பிரிவுக்கு வடக்கிலும், மணிமுக்தா நதிக்குத் தெற்கிலும், உள்ள சிதம்பரம் என்னும் க்ஷேத்திரம் விராட் புருஷனுடைய ஹ்ருதயஸ்தானமாகும். இங்கு சதா சர்வகாலமும் ஆனந்த நடனம் செய்துகொண்டிருக்கும் ஸ்ரீ நடராஜர்தான் நம்முடைய ஹ்ருதயத்தில் இருக்கிற ஆத்மா, ஜ்யோதி.

இந்த க்ஷேத்திரத்தைப் பற்றி தஹர வித்யையிலும், தர்சஜோபநிஷத்திலும், சூதசம்மிதையிலும், பல புராணங்களிலும், தேவாரம், திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறையிலும், கூறப்பட்டிருக்கிறது. அவைகளில் 'சிதம்பர தத்துவ நிர்ணயம்' என்கிற ஒரு வடமொழி நூலில் அடியில் கண்டஸ்லோக மிருக்கிறது.

हृत्पुण्डरीके यद्गूढं वेदान्तैः प्रति पाद्यते ।
तज्योतिः शक्यते द्रष्टुं पुण्डरीक पुरे द्विजाः ॥

இதன் பொருள்

(हे) द्विजाः ஓப்ராம்மணர்களே, वेदान्तैः வேத-உபநிஷதங்களாலும், प्रतिपाद्यते சொல்லப்பட்ட, हृत्पुण्डरीके நமது இதயமாகிற தாமரைப்பூவில், यत् எந்த ப்ரம்மமானது, गूढं ரஹஸ்யமாக இருக்கின்றதோ, तत् அந்த பரப்ரம்ஹ ஜ்யோதியானது, (இங்கு द्रष्टुम् என சேர்த்து 'நமது ஊனக் கண்ணுல்' எனப் பொருள் கொண்டு) पुण्डरीके पुरे விராட் புருஷனுடைய இதயக் கமலமான சிதம்பர ஞானஸபையில், (தான்) द्रष्टुं காண்பதற்கு, शक्यते முடியும் என்றவாறு

ஆத்ம ஜ்யோதி யென்பது நாம் கண்ணுல் காண முடியாதது. அந்த ஜ்யோதியை இவ்வூனக் கண்ணுலும் சிதம்பரத்தில் தான் காணமுடியுமென்று கருத்தாகும். ஆகவே தான் சிதம்பரம் தரிசிக்க முக்தி திருவண்ணுமலே நினைக்க முக்தி,

திருவாரூரில் பிறக்க முக்தி, காசியில் இறக்க முக்தி என்கிற ஒரு ஸ்லோகத்திலும், சிதம்பரம் தரிசிக்க முக்தி என்பது முதலில் கண்டிருக்கிறது. அதற்கும் இதுவேதான் காரணம். ஆத்மஜ்யோதியைக் கண்ணால் பார்க்கிறோம் என்பதால்தான் பார்க்க முக்தி என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இங்கே இறைவனை உருவம், அருவம். உருவ அருவம் என்னும் மூன்று வகையாலும் காண்கிறோம். ஸ்ரீ நடராஜர் உருவம், இரகசியம் அருவம், ஸ்ரீ ஸ்படிகலிங்கம் உருவ அருவம், அப்படி அருவமான இரகசியம்தான் நம்முடைய ஆத்ம ஜ்யோதி; உருவமில்லாதது. ஆனால் பக்கத்தில் உருவமான ஸ்ரீ நடராஜர் ஆனந்த நடனம் ஆடிக்கொண்டிருப்பது நமக்கு உருவத்தைக் காண்பித்து அருவத்தை தியானம் செய்ய வேண்டியதற்காக மூன்றும் ஒருங்கே அமைந்திருக்கிறது.

மேலும் ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் இம்மூவரும் ஒரே இடத்தில் கோயில் கொண்டுள்ள தலமும் இதுவேயாகும்.

## க்ஷேத்திரத்தின் இருப்பிடம்

இத்தலம் சென்னைக்கும் திருச்சிராப்பள்ளிக்கும் உள்ள மெயின் லயனில் இடையே இருக்கிறது.

## தில்லைத் தல வழிகாட்டி

சிதம்பரம் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி சுமார் அரை மைல் மேற்கே வந்தால் நகரத்தின் நடுவே கோயில் இருப்பதையும் நான்கு கோபுரங்களையும் காணலாம். இந்தக் கோயிலின் விஸ்தீர்ணம் ஐம்பத்தொரு ஏக்கர் ஆகும்.

கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு திக்குகளில் பிரம்மாண்டமானதும் கம்பீரமானதும் ஒவ்வொன்றிலும் ஏழு தளங்களும், பதின்மூன்று பெரிய செப்புக் கலசங்களும் உள்ளவைகளுமான நான்கு ராஜகோபுரங்களும் உள்ளே போக வழியுமிருக்கின்றன. கோபுரத்தின் நுழை வாசலின் உயரம் சுமார் 40 அடி ஆகும். இருபக்கங்களிலும் நாட்டிய முத்திரை என்று செபல்லப்படும் பரதக் கலைச் சிற்பங்கள் உண்டு. ஸ்ரீ நடராஜர் தெற்கு முகமாக இருப்பதால் தெற்குக் கோபுரத்தின் மேல் சுவாமியினுடைய கொடி கட்டப்பட்டிருக்கிறது. அன்னக்கொடி எனவும் கூறுவர்.

கிழக்குப் பக்கமாகத்தான் உத்ஸவ காலங்களில் ஸ்வாமி புறப்பாடு முதலியவைகள் நடைபெறும். கிழக்கு கோபுரம் வழியாக உள்ளே நுழைந்தாலும், கோபுரத்தின் இரு புறங்களிலும், தென் பக்கத்தில் ஸ்ரீ விநாயகரும், வட பக்கத்தில் ஸ்ரீ சுப்ரமண்யரும் கிழக்கு முகமாக் கோயில் கொண்டிருக்கிறார்கள்.

தெற்கு கோபுர வழியாக உள்ளே நுழைந்தாலும் ஸ்ரீ விநாயகரும், ஸ்ரீ சுப்ரமண்யரும் சிறிய உருவங்களில் கோபுரத்திலிருக்கிறார்கள். மேல் பாகத்தில் இரு புறங்களிலும் ஸ்வாமியினுடைய த்வாரபாலகர்களில் முதல்வர்களான ஸ்ரீ ஆட்கொண்டார், ஸ்ரீ ஆய்யாக்கொண்டார் சன்னிதிகளிருக்கின்றன. நான்கு கோபுரங்களைச் சுற்றிலும் சுமார் 30 அடி உயரமுள்ள கருங்கல்லாலான மதிற்சுவர் உள்ளது. இது வீரப்ப நாயகர் என்பவர் காலத்தில் புதுப்பிக்கப்பட்டதால் வீரப்ப நாயகர் மதில் என்று சொல்லப்படுவது. தற்போது தர்மபூஷணம் R. பாலசுப்ரமண்ய செட்டியார் ஆகியோர் கொண்ட திருமதில் திருப்பணிக் கமிட்டி என்ற ஒரு

சபையினால் சேவார்த்திகளின் நன்கொடையைக் கொண்டு திருமதில் திருப்பணி நடந்து கொண்டு வருகிறது.

## ஸ்ரீ முக்குறுணி விநாயகர் கோவில்

தெற்குகோபுரத்தின் உட்புறம் நுழைந்ததும்; கிழக்கு முகமாக ஸ்ரீ முக்குறுணி விநாயகர் சன்னதி இவரைப் போன்ற பெரிய உருவமுள்ளவரும், மூர்த்திகரமாயு முள்ள விநாயகர் வேறு எந்த இடத்திலுமில்லை. சுமார் 8 அடி உயரமுள்ளவர். இந்த விநயகர் மிகுந்த வரப் பிரசாதமுள்ளவர்; தங்கள் தங்கள் காரியங்கள் இடை யூறின்றி முடிக்கக் கோரிக்கொண்டு, அப்படியே முடிந்து, அதற்காக 108, 1008 தேங்காய் சதிர்க்காய் உடைக்கிறார் கள். அப்படி இன்றும் நடந்து வருகிறது.

## ஸ்ரீ கற்பக விநாயகர்

பிறகு வலமாகப் போய். மேற்கு கோபுரத்தின் வெளிப் பக்கம் போனால், அங்கு மேற்கு முகமாக ஸ்ரீ கற்பக விநாயகர் சன்னதி யிருக்கிறது. இவர்தான் ஸ்ரீ துருவாஸ மகரிஷிக்கு, இரவு சாமவேளையில், நடனம் செய்து காட்டியவர்.

## ஸ்ரீ சுப்பிரமணியர் கோயில்

மேற்கு கோபுரத்தின் உட்புறத்தில் வடக்குப் பக்கத் தில், கிழக்கு முகமாக, ஸ்ரீ பாலசுப்பிரமணியர் சன்னதி யிருக்கிறது, இங்குதான் ஐப்பசி மாதம் ஸ்கந்த சஷ்டிக்கு ஆறு நாள் திருவிழா நடந்து சஷ்டியில் (தெற்கு வீதியில்) சூர சம்ஹாரம் வெகு சிறப்பாக நடக்கும், இந்த சன்னதி

யில் ஸ்ரீ சுப்பிரமணியரின் நவ வீரர்களின் மூர்த்தமும், ஸ்ரீ சிங்கவாகன ஐந்துமுக விநாயகரும் இருக்கின்றனர்.

## நூற்றுக்கால் மண்டபம் முதலியன

மேலும் வடக்கே போனால் ஸ்ரீ மதுரை சோமசுந்தர சுவாமி சன்னதியும், அதற்கு வடக்கில் நூற்றுக்கால் மண்டபமும், அதற்கு பக்கத்தில், ஒற்றைக்கால் மண்டப விநாயகர் என்கிற திருமூல விநாயகர் சன்னதியும், அதற்கு எதிரில் சிவகெங்கைத் தீர்த்தமும் (குளம்) இருக்கின்றன. இந்த சிவகெங்கைத் தீர்த்தம் மிகவும் விசேஷமானது. கோயிலுக்குள் திருக்குளம் இதைப் போல் பெரியதும், அதிக ஆழமுள்ளதும், சுத்தமானதும், நான்கு புறமும் நல்ல படிக்கட்டுகள் உள்ளதும் வேறு எந்த க்ஷேத்திரத்திலும் இல்லை.

## ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பாள் கோவில்

மேலும் வடக்கே போக ஸ்ரீ ஞான சக்தியாகிற ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பாள் கோயிலிருக்கிறது. இங்கு மற்ற எந்த இடத்திலுமில்லாத ஸ்ரீ சித்ரகுப்தர் கோயிலுமிருக்கிறது. இங்கு கொடிமரம் இருக்கும் மண்டபம் மிகவும் விசாலமானது. இடைத் தாங்கல் ஏதுமின்றி இவ்வளவு அகலமுள்ள கருங்கல் மண்டபம் எங்குமிருக்காது. இங்கு தேவி மஹாமித்யம் பழைய சித்ரக்கலை மூலம் எழுதப்பட்டு வெகு காலமானபடியால் இப்பொழுது இழிந்திருக்கிறது. இங்கு, கருங்கல் தூண் மரத்தூண்போல் வேலை செய்யப்பட்டிருக்கிறது. சிற்ப வேலைகளும் அதிகம். கருங்கல் சங்கலி தொங்குகிறது. மற்றும் இரண்டாவது பிரகாரத்தில் நாட்டியக் கலையின் அபிநய சிற்பங்களிருக்கின்றன.

## ஸ்ரீ பாண்டிய நாயகர் என்கிற ஸ்ரீ சுப்பிரமணிய கோவில்

மேலும் வடக்கே போக வடக்குமுக ஸ்ரீ துர்க்கை அம்பாள் கோயில்; அதற்கு வடக்கே ஸ்ரீ சுப்பிரமணியர் கோயிலுமிருக்கின்றன. பாண்டியராஜாவினுல் கட்டப் பட்டதால் ஸ்ரீ பாண்டிய நாயகம் என்று சொல்லப்படும். இந்தக் கோயில் ஒரு தேர் போலக் கருங்கல் சக்கரங்கள், யானைகளுடன் அமைந்து உள்ளது. தூண்களில் விசேஷ சிற்ப வேலைப்பாடுகள் உள்ளன. இங்கு கந்தபுராணத்தைப் படரூபமாக எழுதி, மற்றும் திருப்பணிகளும் செய்து, கும்பாபிஷேகம் (இருமுறை—1947; 1968) நடந்தன. உபயம்-தருமபூஷணம் திரு செ. ரத்தினசாமி செட்டியார்.

இங்கே மயில்வாகனத்தின் மீது, ஆறுமுகமும், பன்னிரு கைகளுடனும் ஸ்ரீ முருகப்பெருமானும், வள்ளி, தெய்வானையும் வீற்றிருக்கிருர்கள். மூன்ரும் பிரகாரத்தில் ஸ்ரீ முக்குறுணி விநாயகர் வலது புறத்திலும், பாண்டிய நாயகர் ஸ்ரீ சுப்பிரமணியர் இடப் புறத்திலு மிருக்க, நடுவில் தாயாராகிய ஸ்ரீ சிவகாமியம்மன் கோயிலிருப்பது நம்முடைய அனுபவதகையும் காட்டுகிறது.

இந்தக் கோயிலின் வடக்குப் பக்கத்தில் தெற்கு முக மாகவுள்ள ஷண்முகர் சன்னதி என்கிற கோயிலில், ஸ்ரீ சுப்பிரமணியரும், ஸ்ரீ தர்மராஜா (இயமன்) சன்னதியு மிருக்கின்றன. அதற்கும் கிழக்கில் நவக்ரஹங்களால் பூஜை செய்யப்பட்ட ஸ்ரீ நவலிங்கம் கோயிலிருக்கிறது. அதற்கு கிழக்கில் ஐந்து சபையில் அன்னமய கோசமான ராஜ சபை என்கிற ஆயிரக்கால் மண்டப மிருக்கிறது. இதுவே ஸ்ரீ நடராஜ மூர்த்திக்கு ஆனி, மார்கழி மாதங்களில்

நடக்கும் காலை அபிஷேகமும், அலங்காரமும், ஆனந்தத் தாண்டவமும் நடக்கும் சபை இங்கிருந்து தெற்கே போக கோயிலுக்குள் போக வழி உள்ளது.

## உள்பிரகாரம் (மனோமயம்)

இதுவரை நாம் சொல்லி வந்தது மூன்றும் பிரகாரம். இனி இரண்டாம் பிரகாரத்திற்குப்போகிறோம். இரண்டாம் பிரகாரத்துக்கு இரண்டு வழிகள்தான் — கிழக்குப் பக்கம் ஒன்று, மேற்குப் பக்கம் ஒன்று. நாம் கிழக்குப் பக்கம் உள்ள வழியால் உள் செல்லுகிறோம். அங்குள்ள படிகள் 21 என்ற எண்ணிக்கை யுள்ளன. உட்புற மிறங்கியவுடன் இரு பக்கங்களிலும் புருஷா மிருகம் இருக்கின்றன. நாம் கோயிலுக்குப் போகும் பொழுது, நம்மை யறியாமல் ஏற்படும் அனுசாரம் முதலியவைகளைப் போக்கும்படி இவைகளைப் பிரத்தித்துக் கொள்ள வேண்டியது.

## ஸ்ரீ நிர்த்தசபை (நடராஜர் சபைக்கு எதிர்புறம்)

தெற்குப் பக்கமாக வலமாகப் போனால், கிழக்குப் பிரகாரம் முடிந்து தெற்குப் பிரகாரத்தில், ஸ்ரீ கால சம்ஹார மூர்த்தியும், ஐந்து சபையில் மனோமயகோச மாகிற நிர்த்தன சபையில் காளியுடன் ஆடிய ஊர்வத்துவ தாண்டவமூர்த்தி சன்னதியுல், (இந்த நிர்த்தன சபையும் ஒரு தேர் வடிவமாய் அமைந்திருக்கிறது. இடி சபையின் தூண்களில் விசேஷ சிற்ப வேலைப்பாடுகள் உள்ளன.) நரசிம்மாவதாரத்திலுண்டான மதத்தை யடக்க சிவ பெருமான் உடுத்த அவதாரமான ஸ்ரீ சரபேஸ்வரர் சன்னதியு மிருக்கிறன. இவரைப்பற்றி மந்த்ர சாஸ்திரத்தில் விபரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

அங்கிருந்து ஸ்ரீநடராஜமூர்த்தியின் கொடிமரத்துக்கு வந்து, ஸ்ரீ ஆனந்த நடராஜ மூர்த்தியைத் தரிசித்துக் கொண்டு, மேலும் வலம் வர, ஸ்ரீ இலட்சுமியின் சன்னதியும், ஸ்ரீ தண்டாயுதபாணி சன்னதியும் பிறகு மேற்குப் பிரகாரத்தில், ஸ்ரீ பொல்லாப் பிள்ளையார் (ஸ்ரீநம்பியாண்டார் நம்பிக்குச் சொல்லியப்படி சிதம்பரத்தில்இரண்டாவது பிரகாரத்தில் 3 விரலடையாளமுள்ள இடத்தில் தேவாரங்களிருக்கின்றன என்று சொல்ல, அப்படியே திருமுறை கண்ட சோழன் என்கிற அரசன் ஸ்ரீநம்பியாண்டார் நம்பியுடன் தில்லைக்கு வந்து, ஸ்ரீ தில்லைவாழந்தணர்களான தீக்ஷதர்களின் துணை கொண்டு, செல்லரித்ததப் போக மிகுதியான தேவார மிருந்த இடத்தைக் காண்பித்த) ஸ்ரீ திருமுறை காட்டிய விநாயகர் சன்னதியும், மேற்குப் பிரகாரத்தின் கடைசியில் கிழக்கு முகமாக ஸ்ரீ அப்பர், ஸ்ரீ சம்பந்தர், ஸ்ரீ சுந்தரர், ஸ்ரீமாணிக்கவாசகர் என்கிற சமய குரவர் நால்வரின் சன்னதியு மிருக்கிறன. மேலும் வடக்குப் பிரகாரத்தில் வலமாகப் போக, ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சன்னதியும் ஸ்ரீபல்லிகேஸ்வரர், ஸ்ரீ வல்லப கணபதி ஸ்ரீமோஹன கணபதி சன்னதியு மிருக்கின்றன.

ஷை பிரகாரத்தின் நடுவிலுள்ள வழியில் வடக்கு முகமாகப் போக, ஸ்ரீ விநாயகர், சிவலிங்கம், இந்த க்ஷேத்திரத்திற்கு தல விருக்ஷம் தில்லை மரம் உள்ளன. அதனால் தான் தில்லைவனம் என்று பெயர். அந்த விருக்ஷம்இப்பொழுதில்லாதபடியால், சிலாரூபமாக பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. மேலும் ஸ்ரீ அறுபத்து மூன்று நாயன்மார்களும் அதற்கு எதிரில் சுவற்றின் மேல், ஸ்ரீ சிவனுடைய 25மூர்த்தங்களும் படரூபமாகவும். ஸ்ரீசக்ரம், ஸ்ரீதேவியின் அம்ச

மும் படரூபமாகவும் எழுதப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ சண்டேசுவரர் சன்னதியும், அதற்கு கிழக்கே ஸ்ரீ அருணசலேசுவரர் சன்னதியும் பார்த்துக் கொண்டு தெற்கே வர, ஆதிமூலமாய் ஸ்வயம் புவான ஸ்ரீ மூல நாதர் சன்னதி இருக்கிறது. தில்லை வனமாக இருந்த பொழுது தில்லை என்கிற மரத்தடியில் ஸ்ரீ வியாக்கிரபாத முனிவரால் பூஜிக்கப்பட்டு, அவருடையகுமாரரான உபமன்யு மஹரிஷி குழந்தையாயிருந்த பொழுது பாலுக்காக அழுத குழந்தையின் பொருட்டுக் கருணைக் கடலான ஸ்ரீமூலநாதர் பால் கடலையே உண்டாக்கினர். இவரைப் பற்றிதான் சேந்தனர் பாடிய திருப்பல்லாண்டில், "பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிட, பால் கடலீந்த பிரான்" என்ற பாடலைப் பாடி யிருக்கிறர். அப்பெரும் கருணைக் கடலான ஸ்ரீ மூலநாதர், ஸ்ரீஉமயபார்வதி அம்மன் சன்னதிகளும். ஷை ஸ்ரீ மூலநாதர் கோயிலில் ஸ்ரீ வியாக்ரபாதர் ஸ்ரீ பதஞ்சலி இவருடைய மூர்த்தங்களும் பார்த்துக் கொண்டு, மேலும் பிரகாரமாக வர ஸ்ரீ சாஸ்தா என்கிற ஸ்ரீ ஐயப்பன் சன்னதியும், உத்ஸவ மண்டமும் யாக சாலையும் பார்த்துக் கொண்டு தெற்கே போய், மேற்குப் பக்கம் திரும்பிப் போனல் தேவசபை; ஐந்து சபையில் பிராணமய கோசமான தேவ சபை என்று சொல்லப்பட்ட பேரம்பலம். இங்கு தான் உத்ஸவ மூர்த்தங்களிருக்கின்றன. மேலும் இங்கு தான் தீக்ஷிதர்கள் சபை கூடிப்பேசுகிறஇடம். இதற்கு மேற்கு பக்கத்தில் ஸ்ரீ சட்டநாதர் சன்னதியும், ஸ்ரீ சனீச்சரர், ஸ்ரீ நவக்ரஹங்களும், ஸ்ரீ அர்த்தஜாம அழகர் சன்னதிகளும் பார்த்துக்கொண்டு நடராஜ மூர்த்தியின் முதல் பிரகாரத்திற்குப் போகும் வாசல் வழியாக உள்ளே போக, அங்கு முதலில் ஸ்ரீ சித்

ஸபையின் தங்க ஒடுகள் வேய்ந்த விமானம் தெரியும். அங்குதான் ஸ்ரீ ஆனந்தத் நடராஜ மூர்த்தி, ஸ்ரீ சிவகாம சுந்தரியோடு எந்தக் காலமும் ஆனந்தத் தாண்டவமாடிக் கொண்டு, நம் எல்லோரையும் ஆட்டிக்கொண்டிருக்கிறார்.

ஐந்து சபையில் நான்காவதான விஞ்ஞானமய கோசமென்கிற கனகசபையும, ஆனந்தமய கோசமென்கிற ஸ்ரீ சித்சபையும் சேர்ந்திருக்கின்றன. இதுதான் பொன்னம்பலம், சிற்றம்பலம், ஞானசபை, என்கிற அநேக பெயர்களைக் கொண்டது. ஸ்ரீ சித்சபை என்கிற பொன்னம்பலத்தின்மேல் உள்ள தங்க கலசம் ஒன்பதும் ஒன்பது சக்திகளாகும். அதிலுள்ள கைம்மரங்கள் 64-லும் கலைகளாம். ஓடுகள் 21600ம் நம்மால் ஒவ்வொரு நாளும் விடப்படுகிற சுவாசங்களின் கணக்கையும், அதற்குப் பொருத்தப்பட்ட ஆணிகள் 72000-மும் நம்முடைய சுவாச சஞ்சார ஆதாரமான நாடிகளின் கணக்கையும் கொண்டு, நம் ஹிருதயத்திலிருக்கிறஈஸ்வரனே இங்குமிருக்கிறார். என்பதை அறியவே நம் சரீரம்போல் அமைந்திருக்கிறது. கனகசபையிலுள்ள இரண்டாவது பரமேஸ்வரரான ஸ்ரீ நந்தியெம்பெருமானை வணங்கி ஸ்ரீ நடராஜரைத் தரிசிக்க வேண்டும். நம்முடைய ஹிருதயம், சரீரத்தின் நடுவிலில்லாமல் இடப்புறத்தே தள்ளியிருப்பதுபோல் இந்த ஆலயத்திற்கு மத்தியிலில்லாமல், கர்ப்பகிருஹம் சிறிது தள்ளியே இருக்கிறது. ஹிருதயத்தில் இரத்தம் நேரில் பிரவேசிக்காமல், பக்கங்களிலிருந்து பிரவேசிப்பதுபோல இங்கும் நேரில் வழியில்லாமல், இருபக்கங்களிலும்தான் வழி.

மேலும் கனகசபையிலுள்ள பதினெட்டுத் தூண்களும் புராணங்களாகவும் ஐந்து வெள்ளிப் படிகளும் ஸ்ரீ பஞ்சா

கூரங்களாகவும் வெள்ளி பலகணிகள் தொண்ணூற்றாறும் தத்துவங்களாகவும், ஸ்ரீ சித்ஸபையிலுள்ள ஐந்து தூண்களும் பஞ்சேந்திரியங்களாகவும், பிரம்ம பீடத்திலுள்ள பத்துக் தூண்களில் கீழ் ஆறும் சாஸ்திரங்களாகவும், மேலிருக்கும் நான்கும் வேதங்களாகவும், இந்த விதமான தத்துவார்த்தத்தோடு கூடிய பிரணவபீடம், சதாசிவ பீடங்களில் ஸ்ரீ இரகசியமும், ஸ்ரீ நடராஜர், ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பாளும் எழுந்தருளி யிருக்கிறார்கள். ஸ்ரீ நடராஜரின் சிரசிலுள்ள சந்திரனின்றும் உண்டான ஸ்ரீ ஸ்படிகலிங்கமும், ஸ்ரீமாணிக்கமயமான ஸ்ரீ இரத்தின சபாபதி, ஸ்ரீ சுவர்ணகாலபைரவர், ஸ்ரீ பலிநாயகர் முதலியவர்களும் இருங்கிறார்கள்.

ஸ்ரீ நடராஜர் ஆனந்த நடனத்தைப் பற்றியும், இந்த சபையைப் பற்றியும். பின்னால் விரிவாகச் சொல்லப்படும்.

ஸ்ரீ நடராஜரைத் தெரிசித்துக்கொண்டு பிரகாசமாக வந்தால், ஸ்ரீ விநாயகர் ஸ்ரீ லிங்கோத்பவர் ஸ்ரீ சுப்பிரமணியர், ஸ்ரீ பள்ளியறை பக்கத்திலுள்ள வழியாக மேலே போனால், அங்கு ஆகாசலிங்கமும், மறுபடி கீழே வந்து, பள்ளியறைக்குப் பக்கத்தில், ஸ்ரீஜைமினி, ஸ்ரீபிக்ஷாடனர், ஸ்ரீ பைரவர், ஸ்ரீ சந்திரர், ஸ்ரீ சூரியர், ஸ்ரீ அப்பர், ஸ்ரீ சம்பந்தர், ஸ்ரீ சுந்தரர், ஸ்ரீபிரம்மா, ஸ்ரீ சண்டேசுரர் சன்னதிகளு மிருக்கின்றன. மேலும் இந்த பிரகாரத்தின் கீழ்ப்பாகத்தில் சிவபெருமானின் திருவிளையாடற்புராணத் தொடர்புள்ள சில்ப விசேஷங்கள் பார்க்க வேண்டியவை. மறுபடியும் ஸ்ரீ நடராஜர் சன்னதிக்கு வந்து எதிரிலுள்ள படியின் மேல் ஏறிப்பார்த்தால், ஸ்ரீநடரரஜர் சன்னதியும், விஷ்ணுவின் ரூபமான ஸ்ரீ கோவிந்தராஜர் சன்னதியும்

பார்க்கலாம். ஒரே இடத்தில் சிவன், விஷ்ணு இருவருடைய சன்னதியும், வேறு எந்த இடத்திலும் பார்க்ப் முடியாதது. இதற்குக் காரணம் பின் விரிவாகச் சொல்லப்படும்.

## இந்த க்ஷேத்ரத்தின் நித்திய பூஜைகள், உத்ஸவங்கள்

ஸ்ரீ நடராஜ மூர்த்திக்கு தினமும் ஆறுகால பூஜை நடக்கும்—காலையில் மூன்று, மாலையில் மூன்று. அஃதல்லாமல் காலை 6 மணிக்குக் கதவு திறக்கப்பட்டு ஸ்ரீ பள்ளியறையில் பால், பொரி, பழம் முதலியவைகளை நைவேத்தியம் செய்து, தீபாராதனை செய்து, சுவாமியின் பாதுகையை, வெள்ளி, தங்கம், பல்லக்கில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்து, ஸ்ரீ நடராஜரின் பக்கத்தில் வைத்து, ஸ்ரீ நடராஜருக்கும் ஸ்ரீ சிவகாமசுந்தரிக்கும் பால், பழம், பொரி முதலியவைகள் நைவேத்தியம் செய்து, தீபாராதனை செய்வது. இது திருவனந்தல் என்றும், பால் நைவேத்தியம் என்றும் சொல்லப்படும். இது ஷை ஆறு காலங்களில் சேராதது, இதல்லாமல், ஆறு காலங்கள் பூஜை நடக்கின்றன.

ஒரு காலம் என்பது ஸ்ரீ நடராஜருக்காக ஸ்ரீ ஸ்படிக லிங்கஸ்வாமிக்கு அபிஷேகம் செய்து, நைவேத்தியம் செய்து, ஸ்ரீ நடராஜர், ஸ்ரீ சிவகாமசுந்தரிக்கு, தீபாரதனை செய்வது வரை காலம் என்பது; அப்படி உள்ளதில்,

### காலசந்தி

காலை 7 $\frac{1}{2}$ மணிக்கு ஸ்நபன, ஷவன, அதாவது கும்பம் வைத்து, பூஜை செய்து, ஹோமம் செய்து, பஞ்சகவ்யம் முதலியவைகள் அபிஷேகம் செய்து, நைவேத்தியம் செய்து, 9 மணிக்கு தீபாரதனை.

## இரண்டாங் காலம்

10 மணிக்கு ஸ்ரீ ஸ்படிகலிங்கத்துக்கு அபிஷேகம் செய்து, இந்தக் காலத்தில் ஸ்ரீ இரத்தினசபாபதிக்கும், பால், தேன், சந்தனம் மட்டும் அபிஷேகம் செய்து, கற்பூர தீபாராதனை செய்வர். மாணிக்க நடராஜா முன் புறம் காண்பிக்கும் சமயத்தில் கறுப்பாயும், பின்புறம் கற்பூர தீபாராதனை செய்யும் பொழுது ஜோதியாயும் தெரியும். இது முக்கியமான தரிசனம். வேறு எந்த பூஜை நேரத்திலும் காண முடியாது. நைவேத்தியம் செய்து, 11 மணிக்கு தீபாராதனை.

## உச்சிக்காலம்

இரண்டாங்கால தீபாராதனை முடிந்தவுடன் அபிஷேகம் செய்து நைவேத்தியமும் செய்து 12 மணிக்கு தீபாராதனை; உடனே கதவு மூடப்பட்டு, மாலை 5 மணிக்குக் கதவு திறக்கப்படும்.

## சாயரக்ஷை

கதவு திறந்ததும் அபிஷேகம் செய்து, ஆறு மணிக்கு ஷோடசோபசார தீபாராதனை.

## இரண்டாங் (மறு) காலம்

இரவு 7 மணிக்கு அபிஷேகம் செய்து இந்தக் காலத்தில்தான் அருவமான ஸ்ரீ இரகசியத்திற்கு பூஜை; கதவுகள் சாத்தப்பட்டு, பூஜை செய்கிறவரும், செய்து வைக்கிறவரும் ஆக இருவர் மட்டுமிருந்து பூஜை செய்து. நைவேத்தியம் செய்து, 8 மணிக்கு தீபாராதனை.

## அர்த்த ஜாமம்

இரவு 9 மணிக்கு அபிஷேகம் செய்து, நைவேத்தியம் செய்து, 10 மணிக்கு தீபாராதனை செய்து, ஸ்ரீ நடராஜரின் பாதுகையை, வெள்ளி, தங்கம், பல்லக்கில் எழுந்தருளப் பண்ணி, பள்ளியறையில் கொண்டு போய் வைத்து, அங்கும் நைவேத்தியம், தீபாராதனை செய்து, பிறகு ஸ்ரீ பிரம்ம சண்டேசுவரருக்கும், ஸ்ரீ பைரவ சுவாமிக்கும், ஸ்ரீ அரத்தஜாம அழகருக்கும், நைவேத்தியம் செய்து, தீபாராதனை செய்வது வரை, அர்த்தஜாம பூஜை. வெள்ளிக்கிழமைகளில் ஸ்ரீ பாதுகையை இரண்டாம் பிரகாரம் ருக், யஜுஸ், சாம வேதம் முதலிய வேத பாராயணங்களுடனும், தேவார கோஷ்டியுடனும் வலம் வந்து, ஒவ்வொரு இடத்திலும் மண்டகப்படி நடத்தி வருவதும், ஆடி வெள்ளிக்கிழமைகளில் விசேஷமாக நடத்துவதும் வழக்கம்.

மூலஸ்தானம் என்கிற ஸ்ரீ மூலநாதர், உமயபார்வதி சன்னதியிலும், ஸ்ரீசிவகாமசுந்தரி அம்பாள் சன்னதியிலும், தினமும் காலையில் இரண்டு காலங்களும், மாலையில் இரண்டு காலங்களும், ஸ்ரீ பாண்டியநாயகம் என்கிற ஸ்ரீ சுப்பிரமணியர் கோயிலில், காலை ஒரு காலமும் மாலையில் ஒருகாலமும், மற்றும் ஸ்ரீமுக்குருணி விநாயகர் முதல் மற்ற சகல சுவாமிகளுக்கும், காலையில் ஒரு காலமும் மாலையில் ஒரு காலமும் பூஜை நடக்கிறது.

## தில்லைவாழ்ந்தணர்கள் என்னும் தீக்ஷிதர்கள்

இந்தக் கோயிலை தீக்ஷிதர்களே பூஜை செய்து கொண்டும், கோயில் சம்பந்தப்பட்ட சகல நிர்வாகத்தை

யும், அவர்களே நடத்தி வருகிறார்கள். இவர்களுக்குப்
பொது திக்ஷிதர்கள் என்று பெயர். இந்தக் கோயிலில்
நடக்கும் பூஜை முதலிய சகல காரியங்களையும், மிகவும்
கவனமாகக் குறித்த காலத்தில் நடத்தி வருகிறார்கள்.

இந்தக் கோயிலுக்குச் சொந்தமாக நிலம் வைத்துக்
கொள்ளவில்லை. ஆறு கால பூஜைகளுக்கும், விசேஷ
பூஜைகளுக்கும்; திருவிழாக்கள் முதலிய எல்லாக் காரியங்
களுக்கும் பல கட்டளைகள், பலராலும் ஏற்படுத்தப்பட்டு,
அதற்காக நிலமாகவோ, சொத்து மூலமாகவோ, ஏற்பாடு
செய்து, அவர்கள் குடும்பத்திலேயே வைத்துக் கொண்டு,
அந்தந்தக் கட்டளைகளை, அவரவர் குடும்பத்தவர்களே
ஷை தீக்ஷிதர்கள் மூலம் நடத்தி வருகிறார்கள்.

இந்தக் கோயிலை வேத விதிப்படியும், பக்தி சிரத்தை
யுடனும், பூஜை முதலியவைகளைக் குறித்த காலத்தில்
தவறாமல் செய்கிறபடியாலும், மற்றும் சுவாமியின் ஏராள
மான நகை முதலிய சகல சொத்துக்களையும் வெகு கவன
மாகச் சரியான கணக்குடன் வைத்திருக்கிறபடியாலும்,
மேன்மை தங்கிய இந்திய கவர்ன்மெண்டார் அவர்களும்,
இந்தக் கோயிலின் பூஜை, நிர்வாகம் முதலியவைகளில்
தலையிடுவதில்லை.

## ஸ்ரீ நடராஜரின் அபிஷேகங்கள்

நமக்கு ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒரு நாள். ஒரு
வருஷத்திற்கு ஸ்ரீ நடராஜருக்கு ஆறு நாள் அபிஷேகம்.
அதாவது

1. சித்திரை மாதம் திருவோண நக்ஷத்திரத்தில், கனகசபையில், மாலையில் அபிஷேகம்.

2. ஆனி மாதத்தில் உத்திர நக்ஷத்திரத்தில், ராஜ சபை என்கிற ஆயிரங்கால் மண்டபத்தில், உதயத்திற்கு முன் 4 மணிக்கு அபிஷேகம்.

3. ஆவணி மாதத்தில் பூர்வபக்ஷ சதுர்த்தசியில், கனகசபையில், மாலையில் அபிஷேகம்.

4. புரட்டாசி மாதம், பூர்வபக்ஷ சதுர்த்தசியில், கனகசபையில், மாலையில் அபிஷேகம்.

5. மார்கழி மாதம் திருவாதிரை நக்ஷத்திரத்தில், ராஜசபை என்கிற ஆயிரங்கால் மண்டபத்தில், உதயத்திற்கு முன் 4 மணிக்கு அபிஷேகம்.

6. மாசி மாதம் பூர்வபக்ஷ சதுர்த்தசியில், கனக சபையில், மாலையில் அபிஷேகம்.

**மகோற்சவங்கள்**

ஸ்ரீ நடராஜமூர்த்திக்கு வருஷத்திற்கு இரண்டு பிரம்மோற்சவம் நடக்கிறது.

1. முதலாவது ஆனிமாதம் உத்திர நக்ஷத்திரத்திற்கு பத்து நாள் முன் கொடியேறி, முதல் நாள் முதல் எட்டாந் திருவிழா வரையில் உத்ஸவமூர்த்திகளான, ஸ்ரீசோமாஸ்கந்தர், ஸ்ரீ சிவானந்த நாயகி, ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ சுப்பிரமணியர், ஸ்ரீ சண்டேஸ்வரர், முதலிய பஞ்சமூர்த்திகளும், ஒவ்வொருநாளும், ஒவ்வொரு வெள்ளி, தங்கம், வாகனங்களில் வீதியுலா வருவார்கள்.

ஒன்பதாம் நாள் தேர்த்திருவிழாவிற்கு மூலவரான ஸ்ரீ நடராஜர், ஸ்ரீசிவகாமி, ஸ்ரீவிநாயகர், ஸ்ரீசுப்பிரமணியர், ஸ்ரீ சண்டேசுவரர், முதலிய பஞ்சமூர்த்திகளும் ஐந்து

தேர்களில் வீதி வலம் வந்து, ஸ்ரீ நடராஜர், ஸ்ரீ சிவகாமி அம்மனை, ஆயிரக்கால் மண்டபத்தில் எழுந்தருளப் பண்ணி, ஏககால லக்ஷார்ச்சனை நைவேத்யம், மந்த் ராக்ஷதை தீபாராதனை செய்து, காலையில் சூர்யோதயத் திற்கு முன் அபிஷேகம் செய்து, மறுபடி திருவாபரணம் சாத்தி, அர்ச்சனை, பூஜை முதலியவைகள் செய்து பகல் 1 மணிக்கு ஸ்ரீ ஆனந்தநடராஜ மூர்த்தியையும், ஸ்ரீ சிவகாம சுந்தர் அம்பாளையும், ஆனந்த நடனம் செய்து கொண்டு, ஸ்ரீ ஞானகாச ஸ்ரீசித்ஸபா ப்ரவேசம் செய்து, தீபாராதனை யும் செய்து இரவு கடாபிஷேகம் செய்து கொடி இறக்கும் வரை உள்ளது பிரம்மோற்சவம். மறுநாள் விடயாத்தி உத்ஸவமும் நடைபெறும்.

2. இரண்டாவது, மார்கழி மாதம் திருவாதிரை நக்ஷத்திரத்திற்குப் பத்து நாள் முன் கொடியேறி, ஆனி மாதத்திய பிரம்மோற்சவம் போல் சகலமும் நடக்கும். இதில் விசேஷம், சாயரக்ஷை தீபாராதனையின் சமயம். ஸ்ரீ மாணிக்கவாசகரைச் சுவாமியின் சன்னிதானத்திற்கு எழுந்தருளப் பண்ணி, திருவெம்பாவைப் பாட்டுகள் பாடி, சுவாமிக்குத் தீபாராதனை செய்வது, தினமும் காலை விழா வில், ஸ்ரீ மாணிக்கவாசகரையும் எழுந்தருளப் பண்ணுவ துடன், 10-ம்நாள் தரிசனம் முடிந்தவுடன், ஸ்ரீ மாணிக்க வாசருக்கும் தீபாராதனை நடத்துவதுடன், சுவாமிக்கு விடயாத்தி முடிந்த மறுநாள், ஸ்ரீ மாணிக்கவாசகருக்கும் விடயாத்தி உத்ஸவம் நடைபெறும்.

**தசதீர்த்தங்கள்**

மேலும், இந்த க்ஷேத்திரத்தில் பத்துத் தீர்த்தங்கள் இருக்கின்றன.

1. கோயிலுள் இருக்கும் **சிவகங்கைத்** தீர்த்தம். (திருக்குளம்)

2. **சமுத்திரம்**—இந்த க்ஷேத்திரத்தின் கிழக்கில் சுமார் 8 கல் தூரத்திலுள்ளது. வருணபாச மறுத்த இடம்.

3. **புலிமடு**—இந்த க்ஷேத்திரத்தின் தெற்கில் 1 கல் தூரத்திலுள்ளது. ஸ்ரீ வியாக்ரபாதர் தங்கியிருந்த இடம்.

4. **வியாக்ரபாத தீர்த்தம்**—கோயிலுக்கு மேற்குப் பக்கத்தில், ஸ்ரீ இளமையாக்கினார் கோயில் முன் உள்ளது. இந்தக் கோயிலில் ஸ்ரீ வியாக்ரபாதர் பூஜை செய்து வந்தார். இங்குதான் திருநீலகண்ட நாயனார் முதுமை நீங்கி, இளமைப் பருவம் அடைந்தது.

5. **அனந்தத்தீர்த்தம்**. இது வியாக்ரபாத தீர்த்தத்திற்கு மேற்கே ½ கல் தூரத்தில், ஸ்ரீ பதஞ்சலி பகவான் பூமியிலிருந்து பிலத்துவாரம் வழியாகச் சிதம்பரம் வந்த இடம். ஸ்ரீ அனந்தீஸ்வரன் கோயில் முன் உள்ளது.

6. **நாகசேரி**—இதுவும் அனந்தத்தீர்த்தத்துக்கு மேற்குப் பக்கத்தில் உள்ளது.

7. **பிர்ம்மதீர்த்தம்**—இது அனந்தத் தீர்த்தத்துக்கு வடக்கே ½ கல் தூரத்திலுள்ளது திருக்களாஞ்சேரி.

8. **சிவப்ரியை**—இது கோயிலுக்கு வடக்குப் பக்கத்தில், ஸ்ரீ சாமுண்டீஸ்வரி என்னும் ஸ்ரீ தில்லையம்மன் கோயில் முன் இருப்பது.

9. **திருப்பாற்கடல்**—இது சிவப்ரியை என்கிற தீர்த்தத்திற்கும், ஸ்ரீ நடராஜர் கோயிலுக்கும் நடுவி லுள்ளது. இதுதான் ஸ்ரீ வியாக்ரமாத மஹரிஷி குமார

ரான உபமன்யு மஹரிஷி குழந்தையா யிருக்கும்பொழுது ப்ராலுக்காக அழ, கருணைக்கடலாகிய ஸ்ரீ மூலநாதர் பால் கடலாக உண்டாக்கினர். இதைச் சாப்பிட்டு வளர்ந்த குழந்தையான ஸ்ரீ உபமன்யு மஹரிஷி சகல வேத, சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தவரானதால், ஸ்ரீ கிருஷ்ண பகவான் இவரிடம் வந்து சிவதீக்ஷை பெற்றார்.

10. பரமானந்த கூபம்—இது ஸ்ரீ நடராஜர் இருக்கும் ஸ்ரீ சித்ஸபைக்குக் கிழக்குப் பக்கத்தில் உள்ள கிணறு.

இந்தத் தீர்த்தம் மிகவும் விசேஷமானது. இந்தத் தீர்த்தத்திற்கு, ஐப்பசி மாதம் பூர்வபக்ஷ நவமி திதியில் கங்கையே வருகிருள். அதனல் ஸ்ரீ நடராஜர், ஸ்ரீ சிவகாமி மற்றும் கோயிலினுள்ள எல்லா ஸ்வாமிகளுக்கும் எந்தச் சமயத்திலும் அபிஷேகத்திற்கு இந்தத் தீர்த்தம்தான் உபயோகப்படுகிறது.

தை மாதம் அமாவாசையில் மேலே சொன்ன பத்துத் தீர்த்தங்களிலும் சுவாமி தீர்த்தம் கொடுப்பார்.

## வருஷாந்திர உத்ஸவங்கள்

சித்திரை வருஷப்பிறப்பு, திருவாதிரை நக்ஷத்திரம், அமாவாசை முதலிய தினங்களில் சிவகங்கையில் தீர்த்தம் கொடுப்பார். மற்ற மாதங்களிலும் இப்படியே சித்திரை மாதம் முதல் பங்குனி முடிய பன்னிரண்டு மாதங்களில், மாதப்பிறப்பு, பிரதோஷம், வெள்ளிக்கிழமை, திருவாதிரை கார்த்திகை, அமாவாசை, பௌர்ணமி இத்தினங்களில் இரவு உத்ஸவம் நடைபெறும்.

## ஸ்ரீ அப்பர் மோக்ஷ மடைந்த தினம்

சித்திரை சதய நக்ஷத்திரத்தில் ஸ்ரீ அப்பர் ஈசனுடன் ஐக்கிய உத்ஸவம் நடைபெறும்.

வைகாசி மாதத்தில் விசாக நக்ஷத்திரத்தில் சுவாமி புறப்பட்டு, அனந்தீஸ்வரன் கோயிலுக்குப் போய் அங்குப் பூஜைகள் நடந்து. மாலையில் புறப்பட்டு வந்து சேருவார்.

## ஸ்ரீ சம்பந்தர் மோக்ஷ மடைந்த தினம்

வைகாசி மாதம் மூல நக்ஷத்திரத்தில் ஸ்ரீ சம்பந்தர் ஈசனுடன் ஐக்கிய உத்ஸவம் நடைபெறும்.

## ஸ்ரீ மாணிக்கவாசகர் மோக்ஷ மடைந்த தினம்

ஆனி மாதம் பிரம்மோற்சவம். ஷை பிரம்மோத்ஸவத்தின் நடுவில் மக நக்ஷத்திரத்தில், ஸ்ரீ மாணிக்கவாசகர் பஞ்சமூர்த்திகளுடன் காலையில் வீதி வலம் வந்து, சுவாமி முன் எழுந்தருளச் செய்து, சுவாமிக்குத் தீபாராதனை செய்து, ஸ்ரீமாணிக்கவாசகருக்கும் தீபாராதனை நடக்கும். இதுவே மணிவாசக ஐக்கியமாகும்.

## ஸ்ரீ சுந்தரர் மோக்ஷ மடைந்த தினம்

ஆடி மாதம் சுவாதி நக்ஷத்திரத்தில் ஸ்ரீ சுந்தரர் ஐக்கிய உத்ஸவம் நடைபெறும்.

ஆடி அமாவாசையில் சுவாமி விசேஷமாகப் பகலில் வீதி வலம் வந்து, தீர்த்தம் கொடுப்பார்.

ஆடி 18ம் பெருக்குக் கொள்ளிடம் போய்த் தீர்த்தம் கொடுத்து, மாலையில் வழியில் அநேக மண்டகப்படி ஆராதனைகள் நடந்து திரும்பி வருவார்.

ஆடி மாதம் பூச நக்ஷத்திரத்தில் ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பாளுக்கு இரவு விசேஷ அபிஷேக, அலங்காரம் செய்து, பல்லக்கில் வீதி உற்ஸவம் நடைபெறும்.

ஆவணி விநாயக சதுர்த்தியில் ஸ்ரீ விநாயகர் உத்ஸவம் நடைபெறும்.

ஆவணி மூல நக்ஷத்திரத்தில் சுவாமிக்குப் பிட்டு உத்ஸவம் நடைபெறும்.

புரட்டாசி மாதம் ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பாளுக்கு நவராத்திரி உத்ஸவம் விசேஷமாக நடைபெறும்.

ஐப்பசி மாதம் ஸ்ரீ சிவகாமசுந்தரி அம்பாளுக்குப் பூர நக்ஷத்திரத்திற்கு 10நாள் முன்னதாகக் கொடியேறி, 9வது நாள் தேரும் 10வது நாள் நாம் கல்யாணத்தில் செய்யும் சடங்குகள் போல் சில சடங்குகள் செய்து, சிவகங்கையில் தீர்த்தம் கொடுத்து, அவரோகணம் செய்து, (அதாவது கொடியிறக்கி,) மறுநாள் அம்பாள் தபசுசெய்து, அதாவது ஞானபிரகாசம் குளம் வடகரை சிவபுரி மடத்துக்கு முன் அலங்காரக் கொட்டகையில் எழுந்தருளச் செய்து, அங்கு விசேஷமான பூஜைகள் நடந்து மாலையில் அங்கிருந்து புறப்பட்டு வீதி வழியாகக் கோயிலில் வந்து சுவாமிக்கும், அம்பாளுக்கும் திருக்கல்யாணமும். மறுநாள் காலை விழாவுடன் முடிவுறும்.

ஐப்பசி மாதத்திலாவது, கார்த்திகை மாதத்திலாவது, சுக்கிலபக்ஷம் பிரதமையில் துவக்கி ஸ்கந்தசஷ்டி வரை ஸ்ரீ குமரக்கோட்ட சுப்பிரமணியருக்கு உத்ஸவம் செய்து, ஸ்கந்தசஷ்டியிலன்று, சூரசம்ஹாரம் விசேஷமாக நடத்தி, மறுநாள் இரவு ஸ்ரீ சுப்பிரமணியர் திருக்கல்யாணமும், மறுநாள் காலை விழாவுடன் முடிவு பெறும்.

கார்த்திகை மாதம் திருக்கார்த்திகைக்கு பஞ்சமூர்த்தி வீதி வலம் விசேஷமாக நடைபெறும்.

மார்கழி மாதம் முதல் தேதி முதல் 30ம் தேதி வரை தினமும் காலை 5 மணிக்குள் திருப்பள்ளி எழுச்சி பூஜை ஒவ்வொரு நாளும் அன்னப்பாவாடையோடு நடக்கும்.

தை மாதம் இரண்டாந் தேதி ஸ்ரீ சிவகாமி அம்மனுக்குக் காலையில் கனு உத்ஸவமும், இரவு சுவாமிக்கு உத்ஸவமும் நடைபெறும்.

தை மாதம் பூச நக்ஷத்திரத்திற்குப் பத்துநாள் முன் துவங்கி, ஸ்ரீ பதஞ்ஜலி, ஸ்ரீ வியாக்ரபாதர், ஸ்ரீ ஜைமுனி மும்மூர்த்திகளையும் இரவில் எழுந்தருளப் பண்ணி மூன்றும் பிரகாரம் வலம் வந்து, ஸ்ரீ மூலநாதர் சன்னதியில் வந்து சுவாமிக்கு அர்த்தசாம தீபாராதனை செய்து, மும்மூர்த்திகளுக்கும் தீபாராதனை செய்து, சங்கீத கச்சேரிகளும் நடக்கும்.

தைப்பூசதினத்தன்று, காலையில் ஸ்ரீ பஞ்சமூர்த்திகளும், ஸ்ரீ பதஞ்ஜலி, ஸ்ரீ வியாக்ரபாதர், ஸ்ரீ ஜைமினி இம் மூவரும், வீதியுலா வந்து, சிவகங்கையில் தீர்த்தம் கொடுத்து ஸ்ரீ நடராஜர் சன்னதியில் (அதாவது கனக சபை முழுதும்) சுமார் 15 மூட்டை அரிசிக்குத் தயிர் சாதப் பாவாடையுடன் தீபாராதனை நடக்கும். அந்த அன்னத்தைப் பிறகு தீக்ஷிதர்கள், கோயில் சிப்பந்திகள், தர்சனார்த்திகள், பக்தர்கள் முதலிய எல்லோருக்கும் கொடுக்கப்படும். தைப்பூசத்தில்தான் ஸ்ரீ நடராஜர் ஆனந்த நடனம் செய்த நாள். இதன் விபரம் இந்த க்ஷேத்திரத்தின் சரித்திரத்தில் சொல்லப்படும். இரவும் பஞ்சமூர்த்தி வீதிவுலா நடைபெறும்.

தை அமாவாசைக்கு முதல் நாள் இரவு, பத்துத் தீர்த்தங்களில் முதலாவதான சிவகங்கையில் தீர்த்தங் கொடுத்து, உடனே புறப்பட்டு, கிழக்கு சமுத்திரத் திற்குப் போய், அமர்வாசையில் காலையில் சமுத்திரத்தில் தீர்த்தங் கொடுத்து, மறுபடி வந்து சுற்றிலுமுள்ள புலி மடு முதலிய தீர்த்தங்களிலும் கொடுத்துக் கடைசியாக ஸ்ரீ பரமானந்த கூபத்தில் தீர்த்தம் கொடுப்பர்.

மாசி மாதம் மகத்திற்கு முதல் நாள் இரவு ஸ்வாமி கிள்ளைக்குப் புறப்படுப்பட்டுச் சென்று மகத்தன்று காலை சமுத்திரத் தீர்த்தம் கொடுத்துத் திரும்பி வருவார்.

மாசி மாதம் சிவராத்திரிக்கு ஸ்ரீ நடராஜமூர்த்திக்கு தினமும் நடகும் கால பூஜைக்குமேல் இரவு நான்கு காலபூஜைகளும், லக்ஷார்ச்சனையும், மூன்றும்காலம் முடிந்த வுடன் விடிவதற்குச் சற்றுமுன், சுவாமி ரிஷபவாகனத்தில் புறப்பட்டு வீதிவலம் வந்ததும், நான்காவது காலம் அதாவது அர்த்தஜாம காலபூஜை.

பங்குனி மாதம் உத்திரநக்ஷத்திரத்திற்குப் பத்துநாள் முன் ஸ்ரீ பாண்டிய விநாயகர் என்னும் ஸ்ரீ வள்ளியம்மை தெய்வயானை சமேத ஸ்ரீ ஆறுமுக சுப்பிரமணிய சுவாமிக்கு, கொடியேறி தினமும் காலை மாலை ஸ்ரீ உத்ஸவ ஏகமுக சுப் பிரமணியர் வீதியுலா வந்து, தோன்று ஸ்ரீ ஆறுமுக சுப்பிர மணிய உத்ஸவ மூர்த்தி புறப்பட்டுத் தேரில் நான்கு வீதி களும் வந்து, மறுநாள் சிவகங்கையில் தீர்த்தம் கொடுத்து கொடியிறக்கி, வீதிவலம் வந்து, இரவு உத்ஸவம் நடக்கும்.

பங்குனி மாதம் சுக்கில பக்ஷப் பிரதமையில் பத்துத் தீர்த்தத்தில் ஏழாவதான பிர்ம்ம தீர்த்தத்தில் சுவாமி தீர்த்தம் கொடுப்பர்.

## இந்த க்ஷேத்திரத்தின் வரலாறு

யுகாந்தரத்தில் மகரிஷிகளில் சிறந்தவரான வசிஷ்ட மஹரிஷிக்குச் சொந்தக்காரரான மத்யந்தினர் என்ற மஹரிஷி ஒருவர் இருந்தார். அவருக்கு ஒரு குமாரன் பிறந்தான். அவருக்கு மாத்யந்தினர் என்று பெயரிட்டு, நான்கு வேதம், ஆறு சாஸ்திரங்களையும் கற்றுக்கொடுத்து மேலும், "நீ ஆன்ம ஞானம் பெற்று அழிவில்லாத பரம பதத்தை அடைவாய்," என்று ஆசீர்வதித்தார். அதற்கு மாத்யந்தினரும் அப்படியே ஆன்மஞானம் அடைய வழி சொல்லும்படி தகப்பனுரை இறைஞ்சிக்கேட்டார். அதற்கு மத்யந்தினர். "தில்லைவனம் என்றொரு காடு இருக்கிறது. அங்கு ஸ்வயம்புவான ஒரு சிவலிங்கம் இருக்கிறது. அதைப் பூஜித்தால் உன் இஷ்டம் பூர்த்தியாகும்" என்று சொன்னர். மாத்யந்தினரும் அப்படியே தில்லைவனத்தில் போய் தபஸ் செய்துகொண்டு சிவலிங்கபூஜை செய்தும் ஆன்யஞானத்தையடையத் தகப்பனரிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு கிளம்பி, பல வனங்களையும், பல தேசங்களையும் கடந்து, தில்லைவனம் எங்கிருக்கிறது என்று கேட்டுக் கொண்டு வந்து, தில்லைவனத்தை யடைந்து, சுற்றிலும் தேடிப்பார்த்து, ஒருதில்லை மரத்தின் கீழ்ப்பரஞ்சோதியாய் விளங்கும் ஸ்ரீ மூலநாதரைக் கண்டு, "இவரே நம் தகப்பனுரால் சொல்லப்பட்ட சர்வ வல்லமை பொருந்திய சிவலிங்க மூர்த்தி" என்று நிச்சயம் செய்து, அதற்குப் பக்கத்திலிருக்கும் சிவகங்கை என்னும் திருக்குளத்தில் நீராடி, அனுட்டானம் முதலியவைகளை முடித்து, பெருமானின் சந்நிதியில் வந்து பஞ்சாங்க, அஷ்டாங்க நமஸ்காரம் செய்து, தான் இருப்பதற்கும், பெருமான் பேரில் வெய்யில்,

மழை முதலியவைகள் விழாதபடியும் பர்ணசாலையும், பந்தரும் அமைத்துக் கொண்டு, தினமும் பெருமானை அன்போடு பூஜித்து வந்தார்.

அந்த மாத்யந்தினர் தினமும் தனது பூஜைக்கு வேண்டிய புஷ்பம், கனிவர்க்கம் முதலியவைகளையும், தனக்கு உணவுக்கு வேண்டியவைகளையும், தானே தேடிக் கொண்டுவர வேண்டியவராக இருந்துவந்தார். அவ்வாறு தினமும் புஷ்பங்களைப் பொழுது விடிவதற்கு முன்னால் எடுப்பதற்கு இருட்டானபடியால், கண் தெரியாது; ஆயினும் பொழுது விடிந்த பிறகு எடுத்தால் தன் பூஜை தபஸ் முதலியவைகளுக்கு நேரமாகிறபடியால், புஷ்பங் களிலுள்ள தேனை வண்டுகள் எடுப்பதால், அந்தப் புஷ்பங்கள் பூஜைக்கு உகந்த தல்ல, என்றபடியாலும் ஒவ்வொரு நாளும் மிகவும் மன வருத்தப்பட்டுக் கொண்டே புஷ்பம் எடுத்துப் பூஜை செய்து கொண்டு வந்தார்.

இப்படியிருக்கும் நாளில், ஒரு ந்ாள் பணியினால் விடியுமுன் மரங்களிலும் செடிகளிலும் புஷ்பம் எடுக்க முடியாமல், விடிந்த பிறகு எடுக்கும்பொழுது, எல்லாப் புஷ்பங்களும் வண்டுகளால் கடிக்கப்பட்டதாலும்பூஜைக்கு வேறு புஷ்பம் கிடைக்காதபடியாலும், மிகவும் வருத்தப் பட்டு, பூமியில் விழுந்து, புரண்டு அழுதார்.

அப்படி மிகவும் வருத்தப்பட்ட மாத்யந்தினரை, கருணைக் கடலாகிய சிவபெருமான் பார்த்து, அசரீரியாக, "குழந்தாய்! ஏன் வருத்தப்படுகிறாய்?" என்று கேட்டார். உடனே மாத்யந்தினர் துக்கத்தை அடக்கிக்கொண்டு, ஆனந்தத்துடன், "சுவாமி, தங்கள் பூஜைக்காகப் பொழுது விடியுமுன் புஷ்பங்களைப் பறிக்க, இருட்டில் கண் தெரிய

வில்லை. பொழுது விடிந்து பறிப்பது என்றுலோ, பூக்களில் வண்டுகள் தேனை எடுத்து விடுகிறதும் அல்லாமல் பூக்களை பழுதாகவும் ஆக்கிவிடுகின்றன. அதனால் பூஜைக்கு நல்ல புஷ்பங்கள் எடுக்க முடியவில்லை" என்று சொன்னார்.

அதற்கு பக்தர்களுக்கு அருள்புரியும் பெருமான் உடனே, "குழந்தாய், மரங்களில் ஏறுவதற்கு வழுக்காமலிருக்க புலியினுடையகை, கால்கள் போன்ற அவயமும், இருட்டிலும் நன்றாகத் தெரியும்படியான கண் பார்வையும் கொடுத்தோம்." என்று திருவாய் மலர்ந்தருளி மேலும் "புலிக்கால், புலிக்கைகளைப் போன்ற அவயங்களை உடையதால் உன்னுடைய பெயரும் வியாக்ரபாதன் என்றும், இந்தக் காட்டுக்குப் புலியூர், வியாக்ரபுரம் என்றும் பெயர் உண்டாகக் கடவது" என்று திருவாய் மலர்ந்தருள, உடனே பெருமானின் அருளினால் கைகால்கள் புலியினுடையவை போலவும், கண்களும் மிகக் கூர்மையான பார்வையுடனு மிருந்தன. அதனால் பரம சந்தோஷத்தை யடைந்து, ஸ்ரீ மூலநாதர் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்து, முன்னிலும் அதிக பக்தி விசுவாஸத்துடன் பூஜை செய்து வந்தார்.

## உபமன்யு உற்பத்தி

இப்படியிருக்கும் நாளில், இவருக்கு விவாகம் செய்ய வேண்டிய வயது வந்த விட்டபடியால், இவருடைய தகப்பனாரான மத்யந்தினர் தில்லைவனத்துக்கு மகனைப் பார்க்க வந்தார். அப்பொழுது மகன் புலிக்கால், புலிக்கைகளுடன் இருப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டு, புலிக்கால், புலிக்கைகள் வந்த காரணத்தையும், பெருமானின் கருணையையும் கேட்டு மிகவும் ஆனந்தம்

கொண்டு, மகனைப் பார்த்து, "உனக்கு விவாகம் செய்ய வேண்டிய காலம் வந்து விட்டபடியாலும், பிரம்மசர்யாச்ர மத்துக்குப் பின்னர் குலாசாரப்படி கிருஹஸ்ததர்மத்தை கைக்கொள்ள வேண்டியதாலும், உனக்கு நல்ல ஒரு பெண்ணை விவாகம் செய்துவைக்கக் கருதி வந்தேன்" என்றார்.

அதற்கு, தகப்பனாருடைய வார்த்தையை வேத வாக்காக மதித்து நடக்கும் மாத்யந்தினர் என்கிற வியாக்ர பாதரும் சம்மதித்தார்.

மத்யந்தினர் வசிஷ்டருடைய சகோதரியை அவருக்கு மணம் செய்து, வியாக்ரபுரத்திலேயே இருக்க வைத்தார். மாத்யந்தினர் தம் தர்ம பத்தினியோடு இல்வாழ்க்கை நடத்திக்கொண்டு ஸ்ரீ மூலநாதரை மிகவும் விசேஷமாக பூஜை செய்து கொண்டும் வந்தார்.

காலக்கிரமத்தில், வியாக்ரபாதருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு வசிஷ்டர் முதலிய மஹரிஷிகள் வந்து, குழந்தையைப் பார்த்துச் சந்தோஷப் பட்டு, அந்தக் குழந்தைக்கு உபமன்யு என்று பெயரிட்டு, "குழந்தைக்குப் போதுமான பால் முதலியவைகளும், மற்றும் சௌகர்யங்களும் கிடைக்க இந்த வனத்தில், தனியாக வாழும் உங்களுக்குச்சிரமமாகஇருக்குமாதலால், குழந்தையையும், தாயையும் கொஞ்ச நாளைக்கு எங்களுடைய ஆசிரமத்துக்கு அழைத்துக் கொண்டு போய், பிறகு திருப்பிக் கொண்டுவந்து விடுகிறோம்" என்று வசிஷ்டரும், அருந்ததியும் கேட்டார்கள்.

அதற்கு மத்யந்தினரும் வியாக்ரபாதரும் சம்மதிக்க, அப்படியே அழைத்துக் கொண்டுபோய் விட, வசிஷ்ட

ருடைய ஆசிரமத்தில், காமதேனுவின் ருசிமிக்க பால் கிடைக்குமாதலால், குழந்தை உபமன்யு அந்தப் பாலைக் குடித்து, மிகவும் சந்தோஷமாக, நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான்.

இங்கு இப்படியிருக்க வியாக்ரபாதர் தனியே இருக்க மனமில்லாமலும், குழந்தையைப் பிரிந்திருக்க மனமில்லாமலும், வசிஷ்டருடைய ஆசிரமத்தில் சந்தோஷமாக இருக்கும் தாயையும், சேயையும் வியாக்ரபுரத்திற்கு வரும்படி செய்தார்.

## ஸ்ரீ உபமன்யுவுக்காகப் பாற்கடல் உண்டாக்கியது

அப்படியே வந்த குழந்தை உபமன்யு, வியாக்ர புரத்தில், ஸ்ரீ வியாக்ரபாதருக்கு ஸ்ரீ மூலநாதரை விட வேறு காமதேனுவோ, மற்ற ஐசுவரியங்களோ இல்லாத படியால், காமதேனுவின் பாலைப்போல் இங்குக் கிடைக்காத படியால், இங்குக் கிடைக்கும் கஞ்சியைக் குடிக்க மனமில்லாமல், அழுதார்.

அப்படி அழுத குழந்தையை எவ்வளவு சமாதானப் படுத்தியும், குழந்தை உபமன்யு அடங்காமல் அழவே, ஸ்ரீ வியாக்ரபாதர், தனக்குத் தலைவரான ஸ்ரீ மூலநாதர் சன்னதிக்குக் குழந்தையை எடுத்துக்கொண்டு போய், குழந்தையைப் பார்த்து, "எனக்கு காமதேனுவோ மற்ற ஐசுவரியங்களோ சகலமும் இந்தப் பெருமான்தான்" என்று சொல்லிப் பெருமானின் சந்நிதியில் குழந்தையைக் கிடத்தி விட்டார்.

அப்படி விடப்பட்ட குழந்தையும், மேலும் அதிகமாக் அழுதது.

அப்பொழுது, கருணைக் கடலாகிய பெருமான், குழந்தையின் இளந்தொண்டை மிகவும் வறண்டு போனதைக் கண்டு, இரக்கங்கொண்டு, பாலுக்காக அழுகிற குழந்தைக்குப், பாற்கடலையே வரவழைத்து விட்டார்.

ஸ்ரீ வியாக்ரபாதரைக் கூப்பிட்டு "குழந்தாய், பாலுக்காக அழுகிற இந்தப் பாலனுக்காகப் பாற்கடலை வரவழைத்து இருக்கிறோம். அதைக் குடிக்க வைத்து, குழந்தையைச் சந்தோஷமாக வைத்திருப்பாயாக என்று சொன்னார்.

ஸ்ரீ வியாக்ரபாதரும் அப்படியே பால் கடலைப் பார்த்து மிகவும் ஆனந்தங் கொண்டு, குழந்தையையும் குடிக்க வைத்து, பெருமானின் திருவிளையாடலை நினைத்து ஆனந்தங்கொண்டு, மனநிம்மதியுடன் முன்னிலும் விசேஷமாகப் பூஜித்துக்கொண்டு வந்தார்.

## ஸ்ரீ கிருஷ்ணபகவான் சிவ தீக்ஷை பெற்றது

குழந்தை உபமன்யுவும் இந்தப் பாலைக் குடித்து, வளர்ந்து நான்கு வேதம், ஆறு சாஸ்திரங்களும், மற்றுமுள்ளவைகளையும் கற்றுணர்ந்து, வரும்பொழுது ஸ்ரீ கிருஷ்ணபகவான் உபமன்யுவிடம் சிவதீக்ஷை பெற்றுப் போனார்.

## ஸ்ரீ வியாக்ரபாதருக்கு ஆனந்த நடனம் தரிசிக்க நினைவு வருதல்

ஸ்ரீ வியாக்ரபாதர் தினமும் பூஜைசெய்வதும், யோகம் செய்வதும் வழக்கம். அப்படி ஒருநாள் யோகம் செய்யும்

பொழுது, பெருமானின் ஆனந்தத் தாண்டவத்தின் நினைவு உண்டாயிற்று. தியானம் விட்டெழுந்ததும், தனக்குத் தன்னுடைய தகப்பனார் "ஸ்ரீ மூலநாதரைப் பூஜிக்கச் சொன்னாரே அல்லாமல், பெருமானின் தாண்டவத்தைப் பார்க்க வேண்டுமென்று சொல்லவில்லையே; நமக்கு அதைப் பார்க்கும் பாக்கியமில்லையா?" என்று மனம் வருந்திப் பெருமானை முன்னிலும் விசேஷமாய் பூஜை செய்தும், கடும் தவம் செய்து கொண்டும் வந்தார். அடியார்க் கெளியனான பெருமான், வியாக்ரபாதரின் கனவில் தோன்றி, "குழந்தாய், நீ விரும்புகிறபடி நம்முடைய ஆனந்தத் தாண்டவத்தைக் காண்பிக்கிறோம். உன்னைப் போல் பக்திமானாயும் ஆதிசேஷனின் அவதாரமுமான பதஞ்சலி என்பவன் ஸ்ரீ கைலாசத்தில் தபசு செய்து கொண்டிருக்கிறான். அவனுக்கும், உனக்கும் தைமாதம், பூசநக்ஷத்திரமும், குருவாரமும், பூரணையும் கூடும் நாளில், நம்முடைய ஆனந்த நடனத்தைக் காண்பிப்போம்" என்று திருவாய் மலரந்தருளினார். அதைக்கேட்டு, ஆனந்த பரவசமாகி, அதுமுதல் ஸ்ரீ பதஞ்சலியின் வருகையையும், பெருமான் சொன்ன நாளையும் எதிர்பார்த்துப் பூஜித்துக் கொண்டிருந்தார். இங்ஙன மிருக்க, ஸ்ரீ பதஞ்சலியின் வரலாற்றைக் காண்போசு.

## ஸ்ரீ பதஞ்சலி சரிதம்

ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் படுக்கையான ஆதிசேஷன் ஒரு நாள் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பாரம் தாங்க முடியாமல், மிகவும் கஷ்டப்பட்டு ஸ்ரீ மஹாவிஷ்ணுவை நமஸ்கரித்து, "சுவாமி, நான் தங்களை எப்பொழுதும் படுக்கையாக யிருந்து தாங்கி வருகிறேன். அப்படி யிருக்க இன்று

மட்டும் தங்களைத் தாங்குவதற்கு முடியாமல் மிகவும் பாரமாயிருக்கிறது என்ன காரணமோ?'' என்று மிகவும் பயத்துடன் கேட்க, ஸ்ரீ மஹாவிஷ்ணு மிகவும் சந்தோஷமாகப் பதில் சொன்னார்.

## தாருகாவனத்தில் ஸ்ரீபெருமான் திருநடனம் செய்தது

"குழந்தாய், நான் முன் ஒருகால் ஆதிநடனை சிவனின் ஆனந்த நடனத்தைக் கண்டேன். அதை இன்று நினைத்துக்கொண்டபொழுது, அதன் சந்தோஷத்தினால், என்னுடைய சரீரம் பாரமாயிருந்திருக்கும்'' என்று சொன்னார்.

அதற்கு ஆதிசேஷன் "அந்த நடனம் எப்பொழுது, எங்கே, நடந்தது?'' என்று கேட்க, ஸ்ரீ மகாவிஷ்ணு கண்ணில் ஆனந்தபாஷ்யம் பொழியச் சொன்னார்.

"முன் ஒரு காலத்தில், தாருகாவனம் என்ற ஒரு வனத்தில், மிகவும் தபஸ்விகளான மஹரிஷிகள் இருந்தார்கள். அவர்கள் நான்கு வேதம், ஆறு சாஸ்திரம் முதலியவைகளைக் கற்றுணர்ந்தவர்களல்லாமல், அதன்படி கர்மாக்களைத் தவறாமல் செய்து வந்தார்கள்.

"ஆனால், எல்லாவற்றிற்கும் காரணரான ஈஸ்வரன் ஒருவர் இருக்கிறார் என்பதை நினையாமல், தம்முடைய கர்மாவே, மேற்படி கர்மாக்களுக்குப் பலன் கொடுக்கிறது என்று, ஈஸ்வரத்தியானமில்லாம லிருந்தார்கள்.

"கருணைக் கடலாகிய பெருமான், அந்த மஹரிஷிகளையும் உய்விக்கும் பொருட்டும், ஈஸ்வரதியானம் உண்டாவதன் பொருட்டும், திருவுள்ளங் கொண்டு, என்னை (ஸ்ரீ மஹாவிஷ்ணுவை) நினைத்தார். நினைத்த மாத்திரத்

தில், நான் (ஸ்ரீ மஹாவிஷ்ணு) பிரசன்னமானேன். "தாருகாவனத்திலுள்ள மஹரிஷிகளை நல்வழிப்படுத்தத் திருவுள்ளங் கொண்டோம். அதற்கு நீர், சகல புவனங்களையும் மயக்கும்படியான மோஹினி (பெண்) வேடம் கொண்டு, தாருகாவனத்திலுள்ள மஹரிஷிகளிருக்கும் இடங்களில் போய், அவர்களை மயக்கும்'' எனச் சொல்லி விட்டு, தான் ஸ்ரீ நந்திகேஸ்வரரின்மேல் ஆரோகணித்து, தாருகாவனம் போய், ஸ்ரீ நந்திகேஸ்வரரை ஓர் இடத்தி லிருக்கச் சொல்லிவிட்டு, தான் சகல புவனங்களும் கண்டு வியக்கும்படியான பிக்ஷாடன வேஷம் கொண்டு, மேற்படி ரிஷிபத்தினிகள் இருக்கும் பர்ணசாலைகளுக்குச் சமீபத்தில் போய், பிக்ஷைகேட்டுக்கொண்டு. அங்கும் இங்கும் போய்க் கொண்டிருந்தார்.

" நான் (ஸ்ரீ மஹாவிஷ்ணு) பெருமான் சொல்லியபடி மோஹினிவேஷம்கொண்டு, மஹரிஷிகள் தபஸ், ஹோமம், முதலியவைகள் செய்து கொண்டிருக்கு மிடங்களில் காம விகாரத்துடன் சுற்றி வந்தேன். அங்குள்ள இளம் வயதுள்ள ரிஷிகள், மாயையின் அம்சமான ஸ்ரீமோஹினி யின் காமரூபத்தைப் பார்த்து, தங்கள் தபஸ் முதலியவை களை விட்டுவிட்டுத் தாங்களும் காமத்தில் ஈடுபட்டு, தங்கள் தங்களுடைய வஸ்திரம், கேசம் முதலியவைகளை நழுவ விட்டுக்கொண்டு, ஒவ்வொருவரும் தாங்கள் தாங்களே அந்த மோஹினியை அடைய வேண்டும் என்று காம விகாரமான பேச்சுகளையும்செய்கைகளையும் மேற்கொண்டு, என்னைப் (ஸ்ரீமோஹினியைப்) பின் தொடர்ந்தார்கள். நானும் (ஸ்ரீமோஹினியும்) அவரவர்களுக்குக் கிட்டுவது போல் நடித்துக்கொண்டு, அந்த வனம் முழுமையும்சுற்றிச்

சுற்றிவந்தேன். இளம்ரிஷிகளும், கள் குடித்தவர்கள்போல, என்னோடு சுற்றிச் சுற்றி வந்தார்கள். இந்த விதமாக ஒரு புறமிருக்க, மற்றப்புறம் ஸ்ரீபிக்ஷாடனர் வேஷம்கொண்ட ஸ்ரீ பெருமானைப் பார்த்த ரிஷிபத்தினிகள், அவருடைய ரூபத்தைக் கண்டு, மோஹித்து தாங்கள் தாங்களே அவரை யடைந்து, காம சேஷ்டைகளை அனுபவிக்க விரும்பி, தங்கள் தங்கள் கேசங்கள், ஆடைகள் முதலியவைகள் நழுவப், பூக்களி லுண்டான தேனை உண்பதற்குப் பூக்களில் மொய்க்கும் வண்டுகளைப்போல, பிக்ஷாடனரைச் சுற்றிக் கொண்டார்கள். பெருமானும், அவர்கள் ஒவ்வொருவரி டமும் ஆசை யுள்ளவர் போல் நடித்துக்கொண்டு, அந்த வனம் முழுமையும் சுற்றி வந்தார். அந்த ரிஷிபத்தினி களும் சுற்றி வந்தார்கள்.

"இவைகளைத் தூரத்தில் நின்று கொண்டு பார்த் திருந்த ஸ்ரீ நந்திகேஸ்வரர்; பெருமானின் திருவிளையாடலை நினைத்து ஆச்சரியப் பட்டுக்கொண் டிருந்தார்."

இப்படியிருக்க, அங்குள்ள வய தானவர்களாயும், என் (மோஹினியின்)பின் தொடராதவர்களாயுமுள்ள ரிஷிகள், ஒரு பக்கத்தில் பிக்ஷாடனருடன் தங்கள் பத்தினிகள் சுற்றுவதையும், மற்றப் பக்கத்தில் என் (மோஹினியின்) பின் தங்களுடைய இளம் ரிஷிகள் சுற்றுவதையும் பார்த்து, மிகவும் கோபமும் வெட்கமும் அடைந்து, இவ்விதமாக நம்முடைய தபஸ் செய்கிற இடத்தில் விட ஸ்திரீ, விடபுருஷர்களாக வந்து நம்முடைய இளம் ரிஷி களையும் பெண்களையும் காமவிகாரத்தில் ஈடுபடும்படி செய்த இவர்களைக் கண்டிக்க வேண்டும் என்று கோபங் கொண்டு, தங்களுக்கு முக்கிய ஆயுதமான அக்கினியில்

அதர்வண வேதத்தில் சொல்லியிருக்கிற ஆபிசார ஹோமம் (எதிரியைக் கொல்லக் கூடியது) என்பதைச் செய்தார்கள்.

அப்படிச் செய்த அக்னியிலிருந்து பயங்கரமான ஒரு புலி உண்டானது. அதை, விடபுருடன் வேஷம் கொண்ட பெருமானைக் கொல்லும்படி, ஏவினார்கள். அந்தப் புலி, தீ போன்ற கண்களையும். கத்தி போன்ற பல நகங்களையும் கொண்டு, மிகவும் பயங்கரமாகப் பெருமானைக் குறித்துப் பாய்ந்து வந்தது.

அப்படி வந்த புலியைப்பெருமான் தன்னுடைய நகங்களால் இரண்டாக உரித்து, அதன் தோலைத் தமக்கு ஆடையாக்கிக் கொண்டார்.

இதைக் கண்ட மஹரிஷிகள், மறுபடியும் அக்னியில் ஹோமம் செய்ய, அக்கினியிலிருந்து மிகவும் விஷமுள்ள பாம்புகள் உண்டாயின. அவைகளைப் பெருமான் பேரில் ஏவ, அவைகளைத் தமக்கு ஆபரணங்களாகப் போட்டுக் கொண்டார்.

அதையும் பார்த்து மிகவுங் கோபங் கொண்ட அந்த மஹரிஷிகள் மறுபடியும் விசேஷமாக ஹோமம் செய்ய, அந்த அக்னியிலிருந்து, மிகவும் பயங்கரமாயும் அதிக பல முள்ளதுமான அபஸ்மாரம் என்னும் பெரும் பூதம் உண்டானது. அதை அந்த மஹரிஷிகள் பெருமானைக் கொல்லும்படி மிகவும் கோபமாக உத்தரவிட்டார்கள், அந்தப்பெரும் பயங்கரமான பூதமும், அக்னிஜ்வாலைபோல கண்கள் சிவக்க, வீராவேசத்தோடு, பயங்கரமாக சப்தம் செய்துகொண்டு, பெருமானைக்குறித்துப் பாய்ந்துவந்தது. அப்படி வந்த பூதத்தை சர்வ வல்லமை பொருந்திய

பெருமான் தம் வலக்காலுக்கு அடியில் போட்டு, அதன் முதுகில் நின்று கொண்டார்.

இந்த விதம் தங்களால் ஏவப்பட்ட, புலி, பாம்புகள், பெரும்பூதம் முதலியவைகளை வஸ்திரமாகவும், ஆபரண மாகவும், ஆசனமாகவும் செய்துகொண்டதைப் பார்த்து, மிகவும் கோபம் கொண்ட மஹரிஷிகள், தங்களால் வெகு காலம்பூஜிக்கப்பட்டு அதனுல் மிகவும் மஹிமைபொருந்திய அக்னியையே பெருமானை எரிக்கும்படி ஏவினுர்கள். அந்த அக்னியும் இரு முகங்களுடன், ஏழு நாக்காகிற ஜ்வாலையுட னும், பெருமானிடம் வந்தது. அந்த அக்னிக்கும், அதன் சக்தியைக் கொடுக்கக் கூடியவராயும், தம் புன் சிரிப்பி ஞலேயே, முன் ஒரு காலத்தில், திரிபுரம் என்கிற அரக்கர் களை எரித்தவராயும், தம்முடைய நெற்றிக்கண்ணைத் திறந்து பார்த்தமாத்திரத்தில் மன்மதனை எரித்துச் சாம்ப லாக்கியவராயுமுள்ள பெருமான், அந்த அக்னியைத் தமது இடது கையில் ஏந்திக்கொண்டார்.

இதைக் கண்டமஹரிஷிகள் தங்கள் முக்கிய சொத்துப் போன்றதாயும், தங்களுக்கு இதுவரை புலி, பாம்பு, பூதம் முதலியவைகளைக் கிடைக்கும்படி செய்ததாயுமுள்ள அக்னியையும் விட்டுவிட்டபடியால், தங்களிடமுள்ளதான, சகலகர்மாக்களுக்கும் முக்கியமானதாயுள்ள வேதமந்திரங் களையே பெருமான் பேரில் ஏவினுர்கள். அப்படிப்பட்ட சர்வ வேதங்களுக்கும் இருப்பிடமாயும், சர்வ வேதங் களாலும் புகழப்பட்டவருமான, பெருமான், அந்தமந்திரங் களைத் தம்முடைய பாதத்தில் சிலம்புகளாக அணிந்து கொண்டார்.

இந்த விதமாகத் தங்களால் வெகுகாலமாகச் செய்து வந்த தபஸ், அக்கினி, மந்திர முதலியவைகளாலும் எதிரி

யான பெருமானை வெல்ல முடியாததால், பெருமானைப் பெரும் சக்தி வாய்ந்தவராகவும், அதனால் தாங்கள் பெருமானிடம் தோற்றுவிட்டதை நினைத்துவருத்தப்பட்டிருக்கும் பொழுது, கருணாமூர்த்தியாயும், அவர்கள் செய்து வந்த சகலகர்மாக்களுக்கும் பலனைக் கொடுக்கிறவராயுமுள்ள பெருமான், அவர்களுக்கு ஞானக்கண்ணைக் கொடுத்து, தம்முடைய ஜடைகள் எட்டுத் திக்கிலும் விரிந்தாட, அண்டகடாகங்கள் குலுங்கத் தாண்டவத்தைச் செய்தார்.

"அந்தத் தாண்டவத்தைப்பார்த்த மஹரிஷிகள் மிகவும் பயந்து, நம்முடைய கர்மாக்களால் இவரிடம் ஒன்றும் செய்ய முடியவில்லைஎன்றும் இவர்தான் ஈஸ்வரன் என்றும் தெரிந்துகொண்டு தாங்கள் செய்த குற்றங்களை மன்னித்து ரக்ஷிக்கும்படி பிரார்த்தித்தார்கள்."

"இவர்களை ரக்ஷிப்பதற்காகவும்,இவர்களுடைய நிரீஸ்வரவாதத்தைப் போக்கடிப்பதற்காகவும்வந்தவரான பெருமான், தம்முடைய தாண்டவத்தை ஆனந்தமாகச் செய்து, அவர்களுக்கும் ஆனந்தம் உண்டாகச் செய்தார்."

"இதைக் கண்ட நானும் (ஸ்ரீமஹாவிஷ்ணு) ஸ்ரீநந்திகேஸ்வரரும், மிகவும் ஆனந்தமடைந்து, பெருமானுடைய நிக்ரஹ. அனுக்ரஹசக்தியை வியந்துகொண்டிருந்தோம்."

"இந்த விதம் பெருமான் பிக்ஷாடன வேஷமும், நான் (ஸ்ரீமஹாவிஷ்ணு) மோஹினிவேஷமும் எடுத்தகாலத்தில் தான், ஸ்ரீ சாஸ்தா (ஐயனார் அய்யப்பன்) உண்டானார்."

"அந்தமஹரிஷிகள், அந்த ஆனந்த தாண்டவத்தைப் பார்த்து, அஞ்ஞானம் நீங்கி, மெஞ்ஞானம் உண்டாகி, பெருமானைப் பார்த்து, 'நாங்கள் மோக்ஷம் அடைய வழி வேண்டும்' என்று பிரார்த்திக்க, பெருமானும், "நீங்கள்

சிவலிங்கம் ஸ்தாபித்து, சிவபூஜை செய்துவர, பிரம்ம ஞானம் உண்டாகி மோக்ஷம் அடைவீர்கள்" என்று திருவாய் மலர்ந்தருளி, என்னையும் என் இருக்கைக்குப் போக அனுமதி கொடுத்து, ஸ்ரீ நந்திகேஸ்வரர் பேரில் ஆரோகணித்து ஸ்ரீ கைலாசத்தை அடைந்தார்"

"இந்த விதமான நடந்த பெருமானின் ஆனந்த நடனத்தை இப்பொழுது நினைத்துக் கொண்டதன் காரண மாக சந்தோஷப் பெருக்கினால் என் சரீரம் உனக்குப் பாரமாக யிருந்திருக்கும்" என்று ஸ்ரீ மஹாவிஷ்ணு, ஆதிசேஷனுக்குச் சொல்ல, அவர் அதைகேட்டு, "தங்கள் வேலைக்காரனான நானும் அந்த ஆனந்த நடனத்தைக் காண ஆவல்படுகிறேன். அதைக் காணகூடிய மார்க் கத்தை எனக்குச் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.

ஸ்ரீ மஹாவிஷ்ணு, "நீ கைலாஸத்தில் போய் பெரு மானைக்குறித்து தபஸ்செய். பெருமான் உனக்குக் கிருபை கூர்ந்து, அந்த நடனத்தைக் காண்பிப்பார்" என்று சொன்னார்.

உடனே ஸ்ரீ ஆதிசேஷனும், ஸ்ரீ மஹாவிஷ்ணுவிடம் உத்திரவு பெற்றுக் கொண்டு, அவரை வணங்கி, கைலாஸத் திற்குப்போய், பெருமானைக்குறித்து, கடுந்தவம் புரிந்தார்.

ஸ்ரீ ஆதிசேஷன், ஸ்ரீ கைலாசத்தில் தவம் புரிந்து கொண்டிருக்கும் பொழுது, பெருமானும் அவருடைய தபசுக்கு மனமிரங்கி, ஆதிசேஷனின் முன் தோன்றி, "குழந்தாய், நீ எதற்குக் கடும் தவம் செய்கிறாய்?" என்று கேட்க, ஸ்ரீ ஆதிசேஷன் "தங்கள் ஆனந்த தாண்டவ தெரிசனத்தைக் காண விரும்புகிறேன்" என்று சொல்ல, பெருமான், மகிழ்ச்சியோடு, "பூலோகத்தில் வியாக்ரபுரம்

என்று ஒரு வனம் இருக்கிறது அங்கு உன்னைப்போல ஒரு பக்தன், வியாக்ரபாதன் என்பவன், புலிக்கால், புலிக்கைகளுடன் கூடினவனாய், என்னுடைய ஆனந்தத் தாண்டவத்தைக் காண, ஸ்ரீ மூலநாதரைப் பூஜித்து வருகின்றான்.

"நீயும் அங்கு போயிரு, தை மாதத்தில், குருவாரத்தில், பூச நக்ஷத்திரமும் பூரணையும் சேர்ந்த நாளில், நாம் அங்கு ஆனந்தத் தாண்டவம் காண்பிப்போம். ஆனால் நீ உன்னுடைய ஆயிரம் தலைகளோடும் இந்த பாம்பு உருவத்தோடும் போவாயேயானால், எல்லோரும் பயப்படுவார்கள்."

"ஆகையால், முன் ஒரு காலத்தில் அத்ரி மஹரிஷியும், அனசூயையும் உன்னை பிள்ளையாகப்பெறவேண்டும் என்று, ஸ்ரீ மஹாவிஷ்ணுவைக் குறித்துத் தபஸ் செய்ய, ஸ்ரீ மஹாவிஷ்ணுவும் அப்படியே வரம் கொடுத்திருக்கிறார்."

"அப்படியே, நீ அவர்களுடைய கையிலிருந்த நீரில் போய்க் குழந்தையாக, அவர்கள் பயந்து கீழே போட, அதனால் உனக்குப் பதஞ்சலி என்று பெயர் உண்டு. அந்த மனுஷ சரீரமும், ஐந்து பாம்புத் தலையும் உள்ள உருவத்தோடு போய். அவனோடிரு" என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தார்.

## ஸ்ரீ பதஞ்சலி தில்லைவனம் வருதல்

பெருமானின் கட்டளைப்படி ஸ்ரீ பதஞ்சலியும், பிலத்துவாரம் வழியாகப் பூலோகம் வந்து, வியாக்ரபுரத்தையடைந்து, அங்கு தேடி, ஸ்ரீ மூலநாதர் சன்னதியையும், அதன் சமீபத்திலுள்ள சிவகங்கை என்னும் தீர்த்தத்தையும், அதன் கரையில் தபஸ் செய்து கொண்டிருந்த

ஸ்ரீவியாக்ரபாதரையும் பார்த்து இவரே பெருமான் சொல்லிய ஸ்ரீ வியாக்ரபாதர் என்று நிச்சயம் செய்து, அவரின் சமீபத்தில் போய், அவர் நிட்டைகலையும் வரை காத்திருந்து, நிட்டை கலைந்து கண்ணைத் திறக்கும் பொழுது, தான் வந்ததைத் தெரிவிக்க, ஸ்ரீ வியாக்ரபாதரும் வெகு நாளாக எதிர்பார்த்தபடி, ஸ்ரீபதஞ்சலி வந்ததைப் பார்த்து இருவரும் ஒருவரை யொருவர் ஆனந்தத்தால் கட்டித் தழுவி "நீயே பாக்கியசாலி, நீயே பாக்கியசாலி" என்று பெருமானால் பக்தன் என்று சொல்லியதை எண்ணி ஆனந்தம் கொண்டு, இருவரும் க்ஷேம சமாசாரங்களைப் பேசிவிட்டு, சிவகங்கையில் ஸ்னானம் செய்து, ஸ்ரீ மூலநாதர் சன்னிதிக்குப் போய், பூமியில் விழுந்து நமஸ்காரம் செய்து, பெருமானைப் பூஜித்து, ஸ்ரீ வியாக்ரபா தருடைய பர்ணசாலைக்கு அவருடன் போய்ப் போசனம் செய்து, பெருமானுடைய கருணையைப்பற்றியே பேசியிருந்து, ஸ்ரீபதஞ்சலியும் தனியாகப் பர்ணசாலை அமைத்துக் கொண்டு, இருவரும் தினமும், ஸ்ரீ மூலநாதரை விசேஷமாக பூஜை முதலியவைகளைச்செய்துகொண்டு, பெருமான் சொல்லிய தினத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

## ஸ்ரீ பெருமானின் ஆனந்த நடனம்

பெருமான் சொல்லியபடி தை மாதமும், குருவாரமும், பூச நக்ஷத்திரமும், பூரணையும் கூடிய நாள் வந்தது அன்று சூர்யோதயத்துக்கு முன் எழுந்து, நித்திய கடன்களை முடித்து, ஸ்ரீமூலநாதரையும், உமயபார்வதி அம்மனையும் பூஜித்து, சந்நிதியில் அஷ்டாங்க நமஸ்காரம் செய்து, தோத்திரம் செய்து கொண்டு, ஸ்ரீ வியாக்ரபாதரிடம் முன்னம் ஸ்ரீ நந்திகேஸ்வரரால் சொல்லப்பட்டதும்,

பெருமானுலேயே ஸ்ரீ பதஞ்சலியிடம் சொல்லப்பட்டது மான, சூக்குமமாயிருந்த அம்பலம், ஞானசபை என்னும் பல பெயர்களுடைய ஸ்ரீமூலநாதரின் சந்நிதிக்குத் தெற்குப் பக்கத்திலுள்ள சபையில், ஸ்ரீ பெருமானின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பகல் 15 நாழிகை வருமுன், எல்லா தேவர்களும், இந்திரனை முன்னிட்டுக் கொண்டு வந்து குழுமினார்கள்.

உடனே பெரும் சப்தம் உண்டாக, அதைக் கேட்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டுக்கொண் டிருக்கும்பொழுது, தேவதுந்துபிகளுடன், பானுகம்பன் முதலிய தேவ வாத்தியக்காரர்கள் வந்தார்கள். உடன் ஸ்ரீ பிரம்மா, சரஸ்வதி, ஸ்ரீ மஹாவிஷ்ணு, லக்ஷ்மி முதலியவர்களும் பிரசன்னமானார்கள். திரிசகஸ்ர முனீஸ்வரர்கள் என்கிற தில்லை மூவாயிரவரும் வந்தார்கள். உடனே ஒரு பெரும் பிரகாசம் போல் தெரிந்தது. எல்லோரும் பெருமான் தான் வருகிறார் என்று ஆவலுடன் பார்த்துக்கொண் டிருக்கும்பொழுது, இரண்டாவது பரமேசுவரரான ஸ்ரீ நந்திகேஸ்வரர் கையில் பொற்பிரம்புடன் பிரசன்னமானார். எல்லோரும் ஸ்ரீ நந்திகேஸ்வரரைப் பார்த்து, இனிப் பெருமான் சீக்கிரம் வந்து விடுவார் என்று நிச்சயம் செய்துகொண்டு, முரவும் ஆவலுடன் எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீ நந்திகேஸ்வரர், பிரம்மா, ஸ்ரீ மஹாவிஷ்ணு, இந்திரன், முதலியவர்களை க்ஷேமம் விசாரித்து, ஸ்ரீ வியாக்ர பாதர், ஸ்ரீ பதஞ்சலி, ஸ்ரீ உபமன்யு முதலியவர்களையும் க்ஷேமம் விசாரித்து, அவரவர்களை அவரவர்களுக்குத் தகுந்த இடத்தி லிருக்கச்செய்து, ஸ்ரீ வியாக்ரபாதர், ஸ்ரீ

பதஞ்சலி, ஸ்ரீ உபமன்யு முதலியவர்களை அழைத்து, ஸ்ரீ பெருமான் நடனம் செய்யப்போகிற இடத்திற்கு சமீபத்தில் நிற்க வைத்து, நேரமும் பதினைந்து நாழிகையாக, ஸ்ரீ பெருமானின் வருகையை எதிர்பார்த்திருந்தார்கள். உடனே ஞானசபையில் அஞ்ஞானமாகிற திரை விலகவும் ஜோதி ஸ்வரூபமான வெளியில் கருணை வடிவமான ஸ்ரீ பராசக்தியோடு, ஸ்ரீ ஆனந்த நடராஜமூர்த்தி காட்சியளித்தார்.

எல்லோரும் கைகளைச் சிரசின்மேல் கூப்பிக்கொண்டு, கண்களில் ஆனந்த நீர் சொரிய, 'ஓம் சிவ சிவ' என்று தோத்திரம் செய்துகொண்டிருந்தார்கள்.

பெருமான் வலது கையில் டமருகத்தை அடித்துக் கொண்டும், மற்றக்கையில் அபயம் கொடுத்துக்கொண்டும், இடக் கையில் அக்னியை வைத்துக் கொண்டும், மற்றக் கையால் தமது குஞ்சிதபாதத்தைக் காட்டிக் கொண்டும். வலது காலை அபஸ்மாரமென்னும் முயலகன் முதுகின்மேல் வைத்து கொண்டும், குஞ்சிதபாதம் என்கிற இடது காலைத் தூக்கிக் கொண்டும் திருச்சடைகள் எட்டுத் திக்கிலும் விரிந்தாட, தேவ துந்திபிகள் ஒலிக்க, ஆனந்த நடனம் செய்தார்.

கால்களில் வேதமாகிற சிலம்புகள் ஒலிக்கவும், வீர கண்டாமணி முழங்கவும், இடையில் புலித்தோலும், பாம்புகளைப் பூணூலாகவும் கைகளில் கங்கணங்களாகவும் அணிந்து கொண்டும், கண்டத்தில் நீலக்கல் போன்ற விஷமும், ஒரு காதில் குழையும், மற்றக் காதில் குண்டலமும், முகத்தில் புன்சிரிப்பும், பவளவாயும், சகல புவனங்களையும் ரக்ஷிக்கும் திருக்கண் நோக்கமும், திரிபுரங்களையும்

மன்மதனையும் எரித்த நெற்றிக்கண்ணும், சிரசில் கங்கையும் சந்திரனும் விளங்க, பிரம்மாவின் தலைகளை மாலையாகத் தரித்துக்கொண்டும், சகல ஜீவராசிகளுடைய ஹ்ருதயத்தி லிருப்பவராயும் அதனாலேயே சகல மதங்களின் கடவுளரா யுமுள்ள பிரபுவான பெருமான் உமாதேவியார்காண சகல புவனங்களும் தன்னுள் விளங்கப் பரமானந்த நடனம் செய்தார்.

அதைப் பார்த்து, ஸ்ரீ மஹாவிஷ்ணு, ஸ்ரீ பிரம்மா, இந்திராதி தேவர்கள், சகல மஹரிஷிகள், தில்லை மூவாயி ரவர்கள், ஸ்ரீ வியாக்ரபாதர், ஸ்ரீ பதஞ்சலி, ஸ்ரீ உபமன்யு முதலானவர்கள் ஆனந்தப் பெருக்கினால் சித்திரத்தில் எழுதப்பட்டவர்கள் போல அசைவற்று நின்றும், பிறகு நினைவு வந்து ஆனந்தக் கூத்தாடியும், பலவிதமாகத் தோத் திரமுஞ் செய்துகொண் டிருந்தார்கள். இந்த விதம் எவ் வளவு காலம் இருந்தார்கள் என்பது யாருக்கும் தெரிய வில்லை. இப்படி யிருக்கும்பொழுது, பெருமான் ஸ்ரீ வியாக்ரபாதர், ஸ்ரீ பதஞ்சலி இருவர்களையும் பார்த்து "குழந்தைகளே; என்னுடைய ஆனந்தத் தாண்டவத்தைப் பார்த்ததினால், நீங்கள் புனிதரானீர்கள். நானும் மிகவும் சந்தோஷம் அடைந்திருக்கிறேன். உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்கள்" என்று சொன்னார். அதற்கு ஸ்ரீ பதஞ்சலியும் ஸ்ரீ வியாக்கிரபாதரும் "நாங்கள் செய்யும் பூஜையைத் தாங்களும் மிகுந்த பிரியத்தோடு ஏற்றுக் கொள்ளுவதுடன், தாங்கள் இந்த ஞானசபையில் எக் காலமும், எந்த ஜீவராசிகளும் கண்டு, அவர்கள் அறம், பொருள், இன்பம், வீடு முதலிய நான்கு புருஷார்த்தங் களையும் பெற்று உய்ய வேண்டி, ஆனந்த நடனம் செய்ய வேண்டும்" என்று இறைஞ்சிக் கேட்டுக்கொண்டார்கள்.

அதற்குக் கருணை வள்ளலாகிய ஸ்ரீ நடராஜமூர்த்தியும் உலகம் உய்ய வேண்டிக் கேட்டுக்கொண்ட அவர்களின் விருப்பப்படி 'அப்படியே ஆகுக" என்றும், "இங்கே எப்பொழுதும் சகல தேவர்களும் சூழ நீங்களும் இருந்து தரிசித்துக் கொண்டிருக்கக் கடவது" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

அப்படியே எந்த யுகங்களிலும் அழியாமல், அந்தந்தக் காலங்களிலும், மாணிக்கவாசகர் திருவெம்பாவையில் "முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே' என்று பாடியிருப்பதுபோல், பண்டும், இன்றும், என்றும் உள்ளதாக இருந்துகொண்டு சகல ஜீவராசிகளுக்கும், அன்புடன் அவரின் உண்மை அறிந்து, கண்ணால் பார்த்தாலே மோக்ஷம் கொடுத்துக்கொண்டு மிருக்கிறார்.

இங்கு ஞானசபை, கனகசபையைச் சுற்றிலும், ஸ்ரீ விநயகர், ஸ்ரீசுப்பிரமணியர், ஸ்ரீமஹாவிஷ்ணு, ஸ்ரீமஹாலெக்ஷ்மி, ஸ்ரீபிரம்மா (பிரம்மாவிற்குத் தனியாகக் கோயில் கிடையாது என்கிற சாபத்தினால்), ஸ்ரீ சண்டிகேஸ்வரருடன் கூட இருக்கிறார்கள். மற்றும் எல்லாத் தேவர்களும் எல்லா மஹரிஷிகளும் கைதொழுது கொலு வீற்றிருக்கிறார்கள்.

ஸ்ரீ வியாக்கிரபாதரும், ஸ்ரீ பதஞ்சலியும், ஸ்ரீ தில்லை மூவாயிரவரும் பூஜை செய்துக்கொண் டிருக்கிறார்கள்.

### " ஸ்ரீ பிரம்மா யாகம் "

அப்படி யிருக்கும் நாளில், பிரம்ம தேவர் வடக்கே அந்தர்வேதி என்னுமிடத்தில் யாகம் செய்ய நினைத்து, சகல காரியங்களும் செய்து, தேவர்கள் நேரில் வந்து

ஹவிர்ப்பாகம் வாங்க வேண்டு மென்று நினைக்க, அவர்களை ஆஹ்வானம் செய்ய ஒருவரும் வரவில்லை. உடனே பிரம்மா ஞானதிருஷ்டியால் சகல தேவர்களும் சிதம்பரத்திலிருப்பதையும். அந்த யாகத்தைச் சரிவரச் செய்து வைக்க தில்லை மூவாயிரவர்களே வல்லவர்கள் என்பதையும் அறிந்து, உடனே அவர் தம் குமாரரான ஸ்ரீ நாரதரைக் கூப்பிட்டு, சிதம்பரத்திலிருக்கும் தேவர்களையும் அந்த யாகத்தை செவ்வனே செய்துவைக்கத் தெரிந்தவர்களாயும், அந்த யாகத்துக்கு வேண்டியவர்கள் • வேறு எந்த இடத்திலும் கிடைக்க மாட்டாததினுலும், திரிசகஸ்ர முனீஸ்வரர்கள் என்கிற தில்லை மூவாயிரவர்களையும் அழைத்துக் கொண்டு வரும்படி அனுப்பினர்.

ஸ்ரீ நாரதர் சிதம்பரம் வந்து, ஸ்ரீசித்ஸபேசரையும், ஸ்ரீ சிவகாமி அம்மையையும் தரிசித்துக்கொண்டு, மற்றத் தேவர்களையும், தில்லை மூவாயிரவர்களையும் தம் தகப்பனர் செய்யும் யாகத்துக்கு அழைத்து வரும்படி தகப்பனரின் கோரிக்கையைத் தெரிவித்தார்.

அதற்குத் தேவர்கள், தீக்ஷிதர்கள், "நாங்கள் ஸ்ரீ ஆனந்த தாண்டவத்தைத் தெரிசித்துக் கொண்டிருக்கிறோம். இதை விட்டு விட்டு வர மனம் இல்லை" என்று சொல்லி விட்டார்கள்.

ஸ்ரீ நாரதரும் தம் தகப்பனரிடம் போய், இந்தப்படி சொன்னர்.

ஸ்ரீபிரம்மா, உடனே தானே நேரில் போய்க் கூப்பிட்டுக் கொண்டு வருவோம் என்று புறப்பட்டு, சிதம்பரம் வந்து, ஸ்ரீ நடராஜமூர்த்தியையும், ஸ்ரீ சிவகாம சுந்தரியையும், ஸ்ரீ மூலநாதர் ஸ்ரீ உமயபார்வதியையும், தரிசித்து,

ஸ்ரீ வியாக்ரபாதர், ஸ்ரீ பதஞ்சலி, தில்லை மூவாயிரவர், என்கிற தீக்ஷிதர்கள், மற்றத் தேவர்கள் எல்லோரையும் கண்டு தாம் செய்யப்போகிற யாகத்திற்கு எல்லோரும் வர வேண்டுமென்று சொன்னார். ஸ்ரீ பிரம்மாவே நேரில் வந்ததால் ஸ்ரீஇந்திரன் முதலான தேவர்கள் சம்மதித்தார்கள்.

ஆனால் தில்லை மூவாயிரவரகளோ, "நாங்கள் ஸ்ரீ நடராஜரை பூஜிப்பதை விட்டு; தாங்கள் யாகம் செய்யுமிடம் வெகு தூரமாக யிருக்கிறபடியால், வரமாட்டோம்" என்று சொன்னார்கள். அதற்கு ஸ்ரீ பிரம்மாவானவர் ஸ்ரீ வியாக்ர பாதர், ஸ்ரீ பதஞ்சலி இருவரிடம் "நான் செய்யும் யாகத்திற்கு தீக்ஷிதர்களும் எப்படியும் வர வேண்டும்" என்று சொல்ல, ஸ்ரீ வியாக்ரபாதரும், ஸ்ரீ பதஞ்சலியும் தீக்ஷிதர்களிடம், "தாங்கள் எல்லோரும் வருகிற வரையில் நாங்கள் பெருமானைப் பூஜித்தக் கொண்டிருக்கிறோம் என்று சொல்ல, அதற்குத் தீக்ஷிதர்களும், ஒருவாறு சம்மதித்து, ஸ்ரீபிரம்மாவுடன் அந்தரவேதிக்குப் போனார்கள்.

## ஸ்ரீ இரத்தின சபாபதி உற்பத்தி

அங்கு ஆரம்பம் செய்த யாகத்தில் சகல காரியங்களையும் விதிப்படி செய்யத் துடங்கிய முதல் நாளிலேயே, தீக்ஷிதர்கள் ஸ்ரீ நடராஜரைத் தெரிசிக்காததினால் மிகவும் மனம் வருந்தினார்கள்.

இப்படி மனம் வருந்திக்கொண்டே யாகத்தில் ஈடு பட்டுக் கொண்டிருக்கும் தீக்ஷிதர்களுக்காக, ஸ்ரீ நடராஜர் அந்தயாகாக்னியிலிருந்த, ஜோதிஸ்வரூபமாக உண்டானார். உடனே தீக்ஷிதர்களும் அவரை அடைந்து, தரிசித்துக் கொண்டு, யாகத்தைக் குறைவற முடித்து, யாகாக்னியில் உண்டான ஸ்ரீ நடராஜருடன் வியாக்ரபுரம் வந்தடைந்

தார்கள். அப்படி வந்த தில்லை மூவாயிரவரும் எல்லோரும் வந்து விட்டார்களா என்று சரி பார்க்க ஒருவர் குறைய, ஸ்ரீ வியாக்ரபாதரும், ஸ்ரீ பதஞ்சலியும், மற்றத் தீக்ஷிதர்களும் ஒருவர் குறைந்ததைப்பற்றிச் சந்தேகப்பட்டுக் கொண்டிருக்கும்பொழுது ஓர் அசரீரிகேட்டது அதாவது, "குறையும் நபர் நாமே! எம்மையும் சேர்த்து எண்ணிக் கொள்ளவும்" என்று ஸ்ரீ நடராஜர் அசரீரியாகச் சொன்னார். அதைக்கேட்டுச் சகலரும், ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்து, சந்தேகத்தை விட்டனர்.

## நித்திய பூஜா விதியும், டிரஸ்டி பாத்தியமும்

தீக்ஷிதர்களுக்கு அந்தர்வேதி யாகத்திலிருந்து கிடைத்து, கொண்டுவரப்பட்ட ஸ்ரீ நடராஜர் மூர்த்தியே, இப்பொழுது மிருக்கும் ஸ்ரீ மாணிக்கமூர்த்தி ஸ்ரீ இரத்தின சபாபதி என்னும் ஜோதி நடராஜர். தர்ம சாஸ்திரத்தில் சிவனுக்கு வேத விதிப்படிதான் பூஜை செய்ய வேண்டும். சிவபூஜைக்கு சம்பளம் வாங்கக்கூடாது என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. அதன்படி நடக்கும் கோயில் சிதம்பரம் ஸ்ரீநடராஜ கோயில் ஒன்றே. இங்கே வேதவிதிப்படி தான் பூஜை. தீக்ஷிதர்களுக்கே இந்தக் கோயில் சொந்தமான படியால், அந்தத் தீக்ஷிதர்கள் அந்தப் பூஜைக்காக யாரிடமும் சம்பளம் வாங்குவது இல்லை அந்தத் தீக்ஷிதர்கள் முன் காலத்தில், அவரவர்களுடைய முறையிலன்று, இரவு கதவு பூட்டும் பொழுது, ஸ்ரீ சுவர்ணகால பைரவருடைய பாதத்தில் செப்புத் தகட்டை வைத்து விட்டு, பிறகு காலையில் கதவு திறக்கும்பொழுது, ஸ்ரீபைரவருடைய அனுக்ரஹத்தால், அந்தசெப்புத்தகடு, தங்கத்தடாக இருக்கும் அதை எடுத்து அவரவர்கள் தமக்கு மறுமுறை வரும்வரை தம்

குடும்பச் செலவுக்கு வைத்துக் கொள்வார்கள். ஆதலால் அந்த தீக்ஷிதர்கள் வேறு வருவாய்களில் ஆசைப்படாமல், ஸ்ரீ நடராஜரின் பூஜையையே செய்து வந்தார்கள்.

அவ்விதம் தங்கமாக மாறுவது, எந்தக் காலத்தி லிருந்து, என்ன காரணத்தினால் நின்று விட்டது என்று தெரியவில்லை.

## ஹிரண்யவர்மன் சரித்திரம்

இப்படி யிருக்கும் நாளில், கௌடதேசத்தை அர சாளுகிற அரசனின் மூத்த குமாரனான சிம்மவர்மன் என்பவன, தனனுடைய சரீரத்தில் நோய் பீடிக்கப்பட் டிருந்ததால், இராச்சிய பாரம் செய்ய மனமில்லாமல், முடி சூட்டிக்கொள்ளாமல், தன்தேசத்தை விட்டுக் கிளம்பி, பல தேசங்களையும் சுற்றிப் பார்த்துக்கொண்டு வரும்பொழுது, ஒரு வேடனால், தில்லைவனம் என்ற இடத்தில், ஒரு சுயம்பு லிங்கம் இருக்கிறதையும், அங்கும் புலிக்கை, புலிக்கால் களை யுடையவரும், பாம்பின் உடலுடன் இருப்பவரும் பூஜித்துக்கொண்டு வருவதைச் சொல்லக் கேட்டறிந்து, தில்லை வனத்தை அடைந்து, ஸ்ரீ வியாக்ரபாதர். ஸ்ரீ பதஞ்சலி இருவரையும் கண்டு தன்னுடைய கதையைச் சொல்லி, தன் சரீரத்திலுண்டான வியாதி நீங்கக் கிருபை செய்ய வேண்டு மென்று கேட்க, ஸ்ரீ வியாக்ரபாதர், ஸ்ரீ பதஞ்சலி இருவரும் உடனே, ஸ்ரீ மூலநாதரையும் ஸ்ரீ உமயபார்வதியையும், ஸ்ரீ நடராஜரையும், ஸ்ரீ சிவகாம சுந்தரியையும் தரிசிக்கச் செய்து, தாங்களும் பெருமான் சன்னதியில் சிம்மவர்மனின் விருத்தாந்தத்தைச் சொல்லி, அவனுடைய வியாதியையும் பற்றிப் பெருமானிடம் விண்ணப்பித்துக் கொண்டார்கள்.

கருணாமூர்த்தியாகிய பெருமானும் உடனே ஸ்ரீ வியாக்ரபாதரிடம், "குழந்தாய், சிம்மவர்மனை, சிவகங்கைத் தீர்த்தத்தில் போய் ஸ்னானம் செய்யச் சொல்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அப்படியே ஸ்ரீ வியாக்ரபாதரும் சிம்மவர்மனைச் சிவகங்கையில் ஸ்னானம் செய்யச் சொன்னார். சிம்மவர்மனும் மிகவும் பக்தியோடு போய்ச் சிவகங்கையிலே ஸ்னானம் செய்ய, உடனே தன் சரீரத்திலுள்ள நோய் நீங்கிய தல்லாமல், தன் தேகம் தங்க மயமாகப் பிரகாசிப்பதையும் கண்டு, மிகவும் ஆனந்தமடைந்து, ஸ்ரீபெருமான் சன்னிதியில் வந்து பூமியில் விழுந்து புரண்டு, பெருமானின் கருணையையும், சக்தியையும் நினைத்து, நினைத்து ஆனந்தக் கண்ணீர் பெருக. புலம்பிக் கொண்டிருந்தான்.

அதைப் பார்த்த ஸ்ரீ வியாக்ரபாதரும், ஸ்ரீ பதஞ்சலி முதலானவர்களும், பெருமானின் கருணையையும், அற்புதச் செயலையும் கண்டு, ஆனந்தபாஷ்பம் சொரிய, பெருமானைத் தோத்திரம் செய்து, சிம்மவர்மனைப் பார்த்து, "உன்னுடைய சரீரம் தங்க மயமானபடியால், இன்று முதல் உனக்கு ஹிரண்யவர்மா என்று பெயர்" எனச் சொல்லி, பெருமானை அன்போடு பூஜித்துக் கொண்டிருக்கும் நாளில், ஹிரண்யவர்மாவின் தகப்பன், கௌட தேசத்திலிருந்து தன் குமாரனைத் தேடிக்கொண்டு, தில்லைவனத்தி லிருப்பதை அறிந்து வந்து, மகனைக் கண்டு, அவனுடைய நோய் தீர்ந்ததும் சரீரம் தங்க மயமானதும் அறிந்து, அதன் விபரங்களைக் கேட்டு, பெருமானின் அற்புதச் செயலையறிந்து, தாங்களும் சிவகங்கையில் ஸ்னானம்செய்து அனுட்டானம் முடித்துப், பெருமானின் சன்னதியில்

விழுந்து புரண்டு, ஆனந்தக் கண்ணீர் பெருக, கைகளைச் சிரசின்மேல் கூப்பி, தோத்திரஞ் செய்து, ஸ்ரீ மூலநாதரையும் தரிசித்துக்கொண்டு, ஸ்ரீ வியாக்ரபாதர், ஸ்ரீ பதஞ்சலி முதலியவர்களையும் வணங்கி, தான் தன் மகனை தேடி வந்ததையும், மகனைத் தன் ஊருக்கு அழைத்துப்போய், முடி சூட்ட நினைத்திருக்கிறதையுஞ் சொன்னான்.

அதற்கு ஹிரண்யவர்மா, "என்னுடைய புறநோயை நீக்கிய பெருமான், என்னுடைய அகநோயையும் நீக்கி ஆட்கொள்ளுவார். ஆகையால் எனக்கு ராஜ்யசுகம் வேண்டாம். நான் இங்கேயே இருந்துகொண்டு, பெருமானைத் தரிசித்துக் கொண்டிருக்கிறேன்" என்று சொன்னான்.

அதற்கு ஸ்ரீ வியாக்ரபாதர் யோசித்து, இவன் ராஜ்யபாரம் செய்ய முடி சூட்டிக் கொண்டால்தான், இவனைக் கொண்டு, பெருமானுக்கு நல்ல பெரிய கோயிலாகக் கட்டச் செய்யலாம் என்று தீர்மானித்து ஹிரண்யவர்மாவைப் பார்த்துச் சொன்னார்.

"உனக்கு முன்னால் சரீரத்தில் நோயிருந்தபடியால் நீ முடி சூட்டிக் கொள்ளாதது சரி. இப்பொழுது பெருமான் அருளால் உன்னுடைய நோய் தீர்ந்ததல்லாமல், தங்கமயமாயிருக்கிறது. மேலும், பெருமானுக்கும் கோயிலில்லாமலிருக்கிறது. பெரும் கோயில் கட்ட வேண்டும். ஆனபடியால் நீ உன் தகப்பனாரின் விருப்பப்படி ஊருக்குப் போய், முடி சூட்டிக்கொண்டு பெருமானின் துணையால், நீதியுடனும், குடிமக்களிடம் அன்புடனும், ராஜ்யத்தை நடத்திக்கொண்டும், உன்னுடைய தாய், தகப்பன் அனுமதியுடன், அதிகமான பொருளுடன் இங்கு வந்து,

பெருமானுக்குக் கோயில் கட்ட வேண்டும்” என்று சொன்னார்.

ஹிரண்யவர்மாவும், ஸ்ரீ வியாக்ரபாதருடைய வார்த்தையைக் கேட்காமலிருக்க மனமில்லாமலும், பெருமானுக்குக் கோயில் கட்ட வேண்டியதற்காகவும், ஒருவாறு ஒப்புக் கொண்டான். ஆனாலும், பெருமானை விட்டுப் பிரிய மனமில்லாமல், பெருமான் சன்னதியில், வெகு நேரம், விழுந்து, புரண்டு, அழுது மற்றவர்களின் தேறுதல் வார்த்தையால் ஒருவாறு மனத்தை யடக்கிக்கொண்டு, தன் தகப்பனுருடன், தன் தேசத்துக்குப் போனான்.

நல்ல வேளையில் ஹிரண்யவர்மா முடி சூட்டப்பட்டு, பெருமானை எந்நேரமும் மனத்திலிருந்து, நீதி வழுவாமல், குடிகளிடத்தில் அன்புடனும், தாய் தகப்பன் சகோதரன் முதலிய பந்து சனங்களோடும் அன்புடனிருந்து கொண்டிருந்தார்.

இப்படி யிருக்கும்நாளில் அவ்விரண்யவன்மன், தன் தாய் தந்தை உத்தரவுபெற்று, அதிமான பொருள்களுடன் தில்லைக்கு வந்து, பெருமானுக்கும் ஸ்ரீமூலநாதர் ஸ்ரீ உமய பார்வதிக்கும் கோயிலும் நான்கு கோபுரங்களும், ஐந்து பிரகாரங்களும், மதிற்சுவர்களும், மற்றும் மாடமாளிகை கூடகோபுரங்களும், கோபுரங்களில் தங்கக் கலசங்களும், சுவாமி இருக்கும் ஞானசபைக்குத் தங்க ஓடும், தங்கக் கலசங்களும் மற்றும் சபைகளும் அவைகளுக்குத் தங்கக் கலசங்களும், கனகசபை, நிருத்தசபை, தேவசபை ஆகிய மூன்று சபைகளுக்குச் செப்பேபோடு வேய்ந்த விமானங்களும் ராஜசபை என்கிற ஆயிரம் தூண்களுடன் கூடிய மகா மண்டபமும், சிவகங்கை என்கிற தீர்த்தத்திலே நாற்-

புறமும் படிக்கட்டுகளும், மண்டபங்களும் விநாயகர், சுப்ர மணியர் சிவகாமசுந்தரி அம்மாள் ஆகிய பல மூர்த்தங் களுக்குத் தனிக் கோயில்களும் அவைகளுக்குக் காப்புச் சுவர்களும் தள வரிசைகளும் கட்டினன்.

நித்திய, நைமித்திக பூசைகளுக்கும் வருடம் பூராவும் நடக்கும் திருவிழாக்களுக்கும், தைப்பூசப் பாவாடை மற்றும் பல பாவாடைகளும் நடத்த நிலங்களும், பொரு ளும் கொடுத்து, ஸ்ரீ பதஞ்சலி பகவானைக் கொண்டு ஸ்ரீ நடராஜரின் நித்திய, நைமித்திக பூஜைகளுக்கு வேத விதிப் பிரகாரம் பூஜை செய்ய, பதஞ்சலி பத்ததி என்னும் நூலைச்செய்து, அதன்படி தில்லை மூவாயிரவர்களையும் பூஜை செய்து வரச் சொன்னன். யாவும் செவ்வனே நடைபெற்று வரச் செய்தான்.

பிறகு அவனுக்குப் பிற்பட்டவர்களான சோழ ராசாக்கள் பலரும் பொன்னம்பலத்துக்குப் பொன்னேடு வேய்ந்ததாக ஆராய்ச்சியாளர் கூறுவர்.

## ஸ்ரீ பதஞ்சலி வியாகரண சூத்திரம் இயற்றியது

ஸ்ரீ ஆதிசேஷனின் அவதாரமான ஸ்ரீ பதஞ்சலி பகவான் கௌடபாதர் முதலான தன்னுடைய சிஷ்யர் களுக்கு ராஜசபை என்கிற ஆயிரங்கால் மண்டபத்தில் வியாகரண சூத்திர பாடம் சொல்லிக் கொடுக்க நினைத்து, தான் ஆதிசெஷனின் அவதாரமானபடியால், தன் மூச்சுக் காற்றின் விஷத்தினல் சீடர்கள் வெந்துசாம்பலாகி விடுவர் கள் என்று நினைத்து தனக்கும் சிஷ்யர்களுக்கும் மத்தியில் திரை ஒன்று போட்டு, அந்தத் திரைக்குப் பின்னலிருந்து பாடம் சொல்லிக்கொடுப்பதாகவும், பாடம் முடிகிறவரை

யாரும் திரையை விலக்கிப் பார்க்க கூடாது என்றும், பாடம் நடக்கும் பொழுது, தன் உத்திரவின்றி வெளியில் செல்லக் கூடாது என்றும் சிஷ்யர்களுக்கு உத்தரவு செய்து, தன்னுடைய ஆயிரம் வாய்களாலும், எல்லா சிஷ்யர்களும், அவரவர்கள் கேட்கும் கேள்விளுக்கு ஒரே காலத்தில் விடை யளித்துக்கொண்டு, எல்லோருக்கும் புரியும்படிக்குப் பாடம் கற்பித்து வந்தார். இந்த ரகசியத்தை யாரும் அறியார்.

ஒருநாள் கட்டுப்பாட்டை மீறி ஒரு சீடர் ஒரே நேரத்தில் குரு எல்லோருக்கும் ஐயந்திரிபு அறப் பாடம் சொல்லும் அதிசயத்தைக் கண்டறியக் குருவின் கட்டளையை மீறித் திரையை விலக்கி விட்டார் ஸ்ரீ பதஞ்சலி பகவான் சொன்ன வாக்குப் பொய்யாகுமா? ஒரு நொடியில் சிஷ்யர்கள் யாவரும் வெந்து பஸ்மமாகி விட்டனர்.

நடந்தவற்றை ஊகித்தறிந்த குருவான ஸ்ரீ பதஞ்சலி பகவான் மனம் மிகவும் சங்கட மடைந்தது; எனினும் அப்போதுதான் எங்கோ வெளியில் சென்று விட்டுத் திரும்பி வந்தவரான ஸ்ரீ கௌடபாதர் என்பவரைப் பார்த்துவிட்டு இவன் ஒருவனுகிலும் எஞ்சினுனே என்ற பெருத்த சந்தோஷத்தினுல் கட்டுப்பாட்டை மீறி உத்தரவின்றி வெளிச்சென்று வந்ததையும் மறந்து தனது தவவலிமையால் தனது வித்தையை அவருக்கு (கௌடபாதருக்கு) பூர்ணமாக உண்டாகும்படி அனுக்கிரஹித்து விட்டார்.

பிறகு அந்தக்கௌடபாதரிடம் 'முன் ஸ்ரீமர் நடராஜ மூர்த்தியின் உடுக்கையின் சப்தத்திலிருந்து உண்டான அ-இ-உ என்ற சப்தபேதத்தின் மூலம் வியாகரண சூத்ரத்தை இயற்றி, அதை எனது ஆயிரம் நாக்குகளின்

சக்தி கொண்டு உலகில் பரப்ப வேண்டும் என்று பரம கிருபாநிதியான ஸ்ரீ சித்ஸபேசனால் ஆக்ஞாபிக்கப்பட்ட வனாகி, இந்தப் பூமியில் பதஞ்சலியாக அவதாரம் செய்து இந்தப் புண்யக்ஷேத்ரத்தில் ராஜசபையில் இதுநாள் வரை உங்களுக்குக் கற்பித்து வந்தும், ஏனையசிஷ்யர்கள் யாவரும் தெய்வச் செயலால் மாண்டு போக, நீ ஒருவனே மிஞ்சிய தால் உனக்கும் ஏதாகிலும் இடையில் தீங்கு வந்துவிடக் கூடாது என்ற எண்ணத்தினால் அவ்வித்தையைப் பூராவும், நீ, சிரமப்படாமலேயே, பூர்ண அனுக்ரஹத்தின் மூலம் உனக்குத் தெரியப் பண்ணிவிட்டேன். ஆதலால் உன் ஒருவனால்தான் ஈசுவரன் ஆணைப்படி உலகில் பரவ வேண்டும்'' என்று அருளிச் செய்தார். ஸ்ரீ பதஞ்சலி பகவான் மேலக் கோபுரத்திலுள்ள குகையில் வசித்ததாக வும் அறியத் தக்கது.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த வியாகரண சூத்ரபாடம் நடந்த இந்த ஆயிரங்கால் மண்டபம், சபைகள் ஐந்தில் ராஜசபை எனவும், கோசங்கள் ஐந்தில் அன்னமய கோசம் எனவும், ஆயிரம் இதழ்கள் கொண்ட கமலம் எனவும் படும்.

இந்த ஆயிரங்கால் மண்டபத்தில்தான் சமயாசார்யர் கள் நால்வரில் ஒருவரான ஸ்ரீ மாணிக்கவாசக ஸ்வாமிகள் ஊமைப் பெண்ணைப் பேச வைத்தும், சமணர்களை வாதில் வென்றும் பெரும்புகழ் எய்தினர்.

கோயில் ஒன்பது சிதம்பரம் எனப் பல புராணங்களி லும் தேவாரம் முதலிய பன்னிரு திருமுறைகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு ஸ்ரீ மாணிக்கவாசகர் திருவாசகம் பாடியதை, பெருமானே ஒரு பிராமண

வடிவம் கொண்டு மாணிக்கவாசகர் சொல்லப் பெருமான் தானே எழுதித் திருவாசகம் பாடி முடிந்த பின் "பாவை பாடிய வாயால், கோவை பாடு" என்று சொல்ல, ஸ்ரீ மாணிக்கவாசகரும் திருக்கோவையார் பாட, அதை யும் பெருமானே எழுதி, கடைசியில், "மாணிக்கவாசகன் சொல்ல, சிற்றம்பலமுடையான் எழுதியது" என்று, பெருமான் கை எழுத்திட்டு மேற்படி ஓலையை ஸ்ரீ பஞ்சா க்ஷரப் படியில் வைத்துவிட்டு மறைந்தார்.

தில்லைவா ழந்தணர்கள் ஓலையை எடுத்துப் பார்த்து, இதற்குப் பொருள் சொல்ல வேண்டுமென ஸ்ரீ மாணிக்க வாசகரும், ஸ்ரீ நடராஜமூர்த்தியைக் காண்பித்து அவரே இதற்குப் பொருள் என்று சொல்லி, பரவெளியில் கலந்து ஜோதியானார்.

பிற்காலமான அநபாயசோழன் காலத்தில் அவனது மந்திரியாகத் திகழ்ந்த சேக்கிழார் சுவாமிகள் நாயன்மார் களின் வரலாற்றுத் தொகுப்பான பெரியபுராணத்தை எம் பெருமானான ஸ்ரீ நடராஜப் பெருமான் "உலகெலாம்" என்று அடி யெடுத்துக்கொடுத்து, பின் அப்புராணம் முழு வதையும் இயற்றி இந்த ஆயிரங்கால் மண்டபத்தில் தான் அரங்கேற்றினார்.

ஸ்ரீ நடராஜர் பிரம்மாவின் தலைகளை மாலையாகப் போட்டிருக்கின்றார். அதில் முப்பத்திரண்டு தலைகள் உள் ளன. பகவான் ஆடும்பொது தலையிலிருக்கும் சந்திரனிட மிருந்து அமிர்ததாரைகள், ஷை பிரம்மாவின் தலைகளில் விழ, அந்தத் தலைகள் அமிர்தத்தினுடைய சம்பந்தத்தினால் பாட ஆரம்பித்தன. அதிலிருந்துதான் சங்கீதம் உண்டா னது என்று சங்கீத சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது.

ஆகையால் பலசங்கீத வித்வான்களும், பரதநாட்டியம் பயின்றவர்களும் முதலில் இந்த ஆயிரங்கால் மண்டபத்தில் அரங்கேற்றிப் பெரும்புகழடைகிருர்கள் என்பது கண்கூடு.

## உமாபதி சிவாச்சாரியார் வரலாறு

உமாபதி சிவாச்சாரியாரும் தீக்ஷிதர்களில் ஒருவர் தான். அவர் நான்கு வேதம், ஆறு சாஸ்திரம் முதலான வைகளைச்செவ்வனே கற்றுணர்ந்து, ஸ்ரீ நடராஜரைப் பூஜை செய்து கொண்டு வந்தார். அவர் ஒருநாள் தம்முடைய முறையான பூஜை செய்துவிட்டு, உச்சிக்கால பூசை முடிந்த வுடன் வீட்டுக்குப் பூஜைகாறருக்குள்ள மரியாதையுடன் தீவட்டி பிடித்து வர, பல்லக்கில் ஏறிக்கொண்டு போய்க் கொண்டிருந்தார்.

அப்பெங்ழுது ஸ்ரீமறை ஞானசம்பந்தர் என்ற ஞானி பல்லக்கில் போகும் ஸ்ரீ உமாபதி சிவத்தைப் பார்த்து, அவர் சிவானுபவம் அடையக் கூடிய பக்குவமுள்ளவர் என்பதை யறிந்து, உமாபதி சிவத்துக்குக் காதில் கேட்கும் படி "பகல் குருடு போகிறது" என்று சொன்ஞர்.

அதைக் கேட்ட உமாபதி சிவத்துக்கும், குருவினு டைய அனுக்ரஹத்தால், அஞ்ஞானம் நீங்கி மெஞ்ஞானம் உண்டாகி, இவரே நமக்கு உபதேசம் செய்யக் கூடிய குரு என்று, பல்லகை விட்டிறங்கி, மறை ஞானசம்பந்தரைப் பின் தொடர்ந்தார்.

இதைக் கண்ட ஸ்ரீ மறை ஞானசம்பந்தரும், அவரை தனியான இடத்திற்கு அழைத்துக் கொண்டுபோய், உப தேசம் செய்ய வேண்டியதற்காக, அவருக்குக் கிட்டாமல் போய்க் கொண்டிருந்தார். அவரும் போய்க்கொண்டிருக்க

இவரும் தொடர, பகல் உச்சி வேளையானபடியால், தாகம் மேலிட அங்கு ஒரு கைக்கொளர் தன் தறி நெசவுக்காகக் கஞ்சி தடவிக் கொண்டிருக்க, ஸ்ரீ மறை ஞானசம்பந்தர், அதைக்கேட்டு வாங்கிக் குடித்தார்- ஸ்ரீ மறை ஞானசம்பந்தர் கஞ்சி குடிக்கும் பொழுது, அவருடைய முழங்கையில் வழியும் குருவினுடைய எச்சில் கஞ்சியை, குருவினுடைய உச்சிஷ்டம் விசேஷ மென்பதற்காக, ஸ்ரீ உமாபதி சிவம் அதை ஏற்றுக் குடித்தார்.

பிறகு இருவரும் தனியான ஒரு இடத்திலிருந்து, ஸ்ரீ உமாபதி சிவத்துக்கு, ஸ்ரீ மறை ஞானசம்பந்தர் சிவானுபவத்தை உபதேசித்தார்.

இந்த விதம் உபதேசம் பெற்ற ஸ்ரீ உமாபதி சிவம் ஸ்ரீ நடராஜர் கோயிலில் தனக்கு பாத்தியமான பூஜை முறைகளையும் விட்டு விட்டு, கொற்றவன் குடி என்று இப்பொழுதுமுள்ள சிதம்பரத்தின் இரயில் நிலையத்திற் கருகிலுள்ள இடத்தில் வசித்து வந்தார்.

இந்த வித மிருக்கும் நாளில் ஸ்ரீ நடராஜர் கோயிலில், தீக்ஷிதர்கள், பிரம்மோற்சவத்திற்காகக் கொடி யேற்ற, (என்ன காரணத்தினலோ) கொடி ஏற வில்லை.

அப்படிக் கொடி ஏருததினல், தீக்ஷிதர்கள் எல்லோரும் வருத்தப்பட்டு, தங்களில் மேலான ஞானம் பெற்ற ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியாரிடம் போய், கொடியேருததைச் சொல்ல, அவரும் உடனே ஸ்ரீ நடராஜர் கோயிலுக்கு வந்து, ஸ்ரீ நடராஜர் கொடிமரத்தின் சமீபத்தில் போய், ஸ்ரீ நடராஜரைத் தியானித்து, கொடிக்கவி என்னும் பதிகத்தைப் பாட, கொடி தானகவே ஏறி விட்டது. உடனே தீக்ஷிதர்களும் மற்றுமுள்ளவர்களும்,

மிகவும், பக்தி விசுவாசத்துடன் ஸ்ரீ உமாபதி சிவத்தை நமஸ்கரித்து, அவர் தங்கியிருந்த இடத்தை, ஓர் நல்ல மடமாக அமைத்து வைத்தார்கள்.

அந்த மடத்தில் ஸ்ரீ உமாபதி சிவம் நிஷ்டை புரிந்து கொண்டிருக்கும் நாளில், பெற்றான் சாம்பான் என்னும் ஒரு பஞ்சமன், இந்த பஞ்ச பூதங்களின் செய்கையான சரீரத்தோடு, மோஷம் அடைய வேண்டுமென்று, ஸ்ரீ நடராஜரை, மிகவும் பக்தியோடு தியானம் செய்து வந்தான்.

அவனுடைய பக்திக்கு கருணாமூர்த்தியாகிய ஸ்ரீ நடராஜர், அவனுடைய கனவில் தோன்றி, "நீ கொற்றவன் குடியிலிருக்கும் ஸ்ரீ உமாபதி சிவத்தை அடைவாயாக" என்று திருவாய் மலர்ந்தருளினார். அதைக் கேட்டு மிகுந்த ஆனந்தத்தோடி உமாபதி சிவத்தினிடம் சென்று வணங்கி தன் விருப்பத்தைச் சொன்னான். அவர் அப்படிச் செய்ய மன மில்லாம லிருந்தார். அப்படி யிருக்கப்பெற்றான் சாம்பான் மேற்படி மடத்திற்குத் தினமும், விறகு முதலிய வைகள் கொண்டுவந்து கொடுத்துத் தொண்டு செய்து கொண்டு, உமாபதி சிவத்தினுடைய அன்பை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான்,

பல நாளாகியும், அவர் ஒன்றும் பேசாதபடியால் மறுபடியும் ஸ்ரீ நடராஜரிடத்தில், தன் விருப்பம் நிறைவேறுதலைச் சொல்லித், தோத்திரஞ் செய்தான்.

உள்ளத்தைச் செய்வதற்கும், உள்ளத்தைச் செய்யாம லிருப்பதற்கும், உள்ளத்தை மாற்றிச் செய்வதற்கும் சர்வ வல்லமை பொருந்திய கருணாமூர்த்தியாகிய ஸ்ரீ நடராஜப் பெருமான், பக்தனை பெற்றான் சாம்பானின் வேண்டுகோளின்படி, இந்தச் சரீரத்தோடு முத்தி கொடுக்க,

கொற்றன் குடியிலிருக்கும் உமாபதி சிவத்துக்கு ஒரு கைச் சீட்டு எழுதிக் கொடுத்தார்.

பெருமான் உமாபதி சிவத்துக்கு எழுதியனுப்பிய சீட்டின் பாட்டு "அடியார்க் கெளியன் சிற்றம்பலவன், கொற்றங்கொடியானுக் கெழுதிய கைச்சீட்டு, படியின்மிசை, பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து, முத்தி கொடுக்க முறை" என்னும் பாட்டை எழுதி யனுப்பினார். அதைப்பெற்றான் சாம்பான் ஆனந்தக்களிப்புடன் கொண்டு போய், ஸ்ரீ உமாபதி சிவத்தினிடம் கொடுக்க, அவரும் வாங்கிப்பார்த்து, பெருமானின் கட்டளையைச் சிரசின்மேல் வகித்து, பெற்றான் சாம்பானின் பக்தி விசேஷத்துக்கு மனமிரங்கி, அவன் விருப்படியே முத்திக்கொடுக்கும்படி எழுதிய பெருமானின் கருணையை வியந்து, அப்படியே அவனுக்குச் சிவானுபவத்தை உபதேசித்து, மோக்ஷத்தை அடையச் செய்தார்.

பெருமானின் கட்டளையால் இந்த விதத் மோக்ஷம் அடையச் செய்த விவரத்தை அறியாத பெற்றான் சாம்பானின் சொந்தக்காரர்கள், ராஜனிடம் ஓடி முறையிட்டார்கள் தங்களுடைய சொந்தக்காரனை பெற்றான் சாம்பான் என்பவனை இவர் கொன்று விட்டார் என்று.

அதை கேட்ட ராஜனும், அதை நன்றாக விசாரித்து ஆக வேண்டியவைகளைச் செய்ய, தன்னுடைய மந்திரி முதலானவர்களை அனுப்பி, ஸ்ரீ உமாபதி சிவத்தினிடம் விசாரிக்கச் செய்தான்.

அவர்கள் வந்து கேட்க, ஸ்ரீ உமாபதி சிவமும் நடந்தவைகளைச் சொல்ல, மந்திரி முதலானவர்கள் ராஜனிடம் போய் சொன்னார்கள்.

ராஜனும், நடந்தவைகளைக் கேட்டு, இந்த விதமும் நடந்திருக்குமோ என்று சந்தேகப்பட்டு, தானே நேரில் போய் விசாரிக்க வேண்டுமென்று, சிதம்பரத்துக்கு வந்து கொற்றங் குடியிலிருக்கும் ஸ்ரீ உமாபதி சிவத்தினிடம் போய், நடந்தவைகளைப் பற்றி நன்ருக அறிந்து, அதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதற்காகத் தானே நேரில் வந்ததாகச் சொன்ஞன்.

சகல சாஸ்திரங்களையும் நன்குணர்ந்த ஸ்ரீ உமாபதி சிவமும், ராஜனுக்கு நன்ருக விளங்கும்படி, பெற்ருன் சாம்பான், பெருமானிடம் இந்தச் சரீரத்தோடுதான் முத்தியடைய வேண்டுமென்று கேட்டதையும், அதற்குப் பெருமானும் மனமிரங்கி, தனக்குச் சீட்டு எழுதியனுப்பிய தையும் காண்பித்து, அதன்படி பெருமானின் கட்டளையால் தான் பெற்ருன் சாம்பானுக்குச் சிவானுபதத்தை உபதே சித்து முத்தி, கொடுத்ததை விவரமாக சொன்ஞர்.

இவைகளைக் கேட்ட நீதியுள்ள அரசனும், இவருடைய சக்தியை அறியாமல், எந்த விதம் இந்தச் சரீரத்தோடு முத்தியடைய முடியுமென்று சந்தேகப்பட்டான்.

அதை யுணர்ந்த ஸ்ரீ உமாபதிசிவம் அரசன் நம்பிக்கை யடையும் பொருட்டு மடத்தின் பக்கத்திலிருந்த, மோக்ஷம் அடையப் பக்குவமான, ஒரு முள்ளிச்செடியை பெருமா னின் அருளால், முத்தியடையச்செய்தார். அதைக் கண்ட அரசனும், மந்திரி பிரதானிகளும், பெற்ருன் சாம்பானின் சொந்தக்காரர்களும் அப்பொழுதுதான் ஸ்ரீ உமாபதி சிவத்தின் உண்மையறிந்து, அவர் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து, தாங்கள் தெரியாமல் செய்த குற்றங்களை மன்னிக்கும்படி வேண்டிக் கொண்டு, சிதம்பரம் கோயி

னுக்கு வந்து, சகல உலகங்களையும் சதாகாலமும் ஆட்டி வைத்துக்கொண்டு, தானும் ஆனந்தமாக ஆடிக் கொண்டிருக்கும் ஆடவல்லானைத் தரிசனம் செய்துகொண்டு, தங்களிருப்பிடம் சென்றார்கள்.

இந்த விதம் ஸ்ரீ நடராஜரின் அவதாரமாக விளங்கும், ஸ்ரீ உமாபதி சிவம், சைவ சமயத்தின் பெருமையை விளங்கப்படுத்த குஞ்சிதாங்க்ரிஸ்தவம், பௌஷ்கரபாஷ்யம் பக்த விலாசம் என்னும் வடமொழி நூல்களையும் கொடிக் கவி, திருவருட் பயன், நெஞ்சுவிடுதூது, சங்கற்ப நிராகரணம், சிவப்பிரகாசம், போற்றிப்பஃறொடை, உண்மை நெறி விளக்க வினாவெண்பா, கோயிற்புராணம், சேக்கிழார் புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறைகண்ட புராணம், திருப்பதிகக் கோவை என்னும் தமிழ் நூல்களையும் இயற்றியருளினார்.

ஸ்ரீ உமாபதி சிவம் கொற்றவன் குடியிலேயே சிவானுபவம் எய்தினார். இப்பொழுதும் அங்குக் கோயிலாகக் கட்டப்பட்டு அவருடைய உருவமும் அங்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது.

தில்லை மூவாயிரவர்களை, ஸ்ரீ நடராஜரோடு சேர்த்தே ஸ்ரீ திருஞானசம்பந்தர், ஸ்ரீ திருநாவுகரசர், ஸ்ரீசுந்தரர் முதலியவர்களும் பாடியிருக்கிறார்கள். திருநீலகண்ட நாயனாருக்கும் பெருமானுக்கும் உண்டான பிணக்கை' ஸ்ரீ தில்லைவாழந்தணர்களின் சபையில்தான் தீர்த்துக் கொண்டார்கள். கம்ப ராமாயணத்தை அரங்கேற்றத் தில்லைவாழந்தணர்களின் சாற்றுக் கவி தேவைப்பட்டது.

ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத்தொகை எழுத திருவாரூரில் பெருமானால், "தில்லைவாழந்தணர்

தம் அடியார்க்குமடியேன்" என்று துவக்கியபடி செய்தருளினர்.

அந்தத் திருத்தொண்டத் தொகையிலும் அரிய ' பெரிய, செயல்களைச் செய்த, ஸ்ரீ கண்ணப்பர், ஸ்ரீ சிறுத் தொண்டர், ஸ்ரீ காரைக்காலம்மை முதலியவர்களிருக்க, திருநீலகண்ட நாயனரைத் தொண்டரில் இரண்டாவதாகப் பாடியது, மேற்படி நாயனர் சிதம்பரத்தில் பிறந்து, வசித்தவர் என்கிறபடியால் இரண்டாவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த க்ஷேத்திரத்தின் மஹிமையால், இங்கு ஒரு சிறு புண்ணிய கர்மம் செய்தாலும், அது பல மடங்கு பலனைக் கொடுக்கும். அப்படியே ஒரு சிறு பாவம் செய்தாலும், அதற்கு மிகவும் கடுமையான தண்டனை வந்தடையும் இந்தத் தலத்தில் வசித்தவர்கள் நரகத்திலிருக்க வேண்டியதில்லை. ஆனல் அவர்கள் பாவம் செய்தால், அதற்குத் தண்டனை, பலகாலம் நரகத்திலிருந்து அனுபவிக்க கூடிய தண்டனையை, ஸ்ரீ பைரவசுவாமி சூலத்தின் நுனியில் கொஞ்ச நேரத்தில் அனுபவிக்க வேண்டும். (அதாவது அவ்வளவு கடுமையான தண்டனை)

ஆகையால், இந்த க்ஷேத்திரத்தில், அதிலும் இந்தக் கோயிலின் நான்கு கோபுர எல்லைக்குள், எந்த விதமான பாவத்தையும செய்யக் கூடாது.

## இந்த க்ஷேத்திரத்தைப்பற்றி அறியக்கூடிய உபநிஷத்துக்கள், நூல்கள்.

கைவல்லிய உபநிஷத்து, சாந்தோக்ய உபநிஷத்து, தைத்திரீய உபநிஷத்து, சுவேதாசுவதரோபநிஷத்து,

பிருகதாரண்ய உபநிஷத்து முதலியவைகளிலும் 1. தில்லைவன மான்மியம், 2. புலியூர் மான்மியம், 3. வியாக்ர புர மான்மியம், 4. புண்டரிகபுர மான்மியம், 5. ஹேம சபாநாத மான்மியம், 6. சிதம்பர மான்மியம், 7. சித்ஸபா ப்ரதிஷ்டா மான்மியம், 8. சிதம்பர ரகஸ்யம், 9. சிதம்பர ரகஸ்ய மந்திர உபாசனுகற்பம், 10. சம்மேளனப் பிரஸ்தாரம், 11. ரகசியப் பிரணவப்ராகார லக்ஷணம் 12. மகா ரகசியஸ்தான லக்ஷணம், 13. ஆகாச பைரவ கற்பம், 14. சிதம்பர பஞ்சாக்ஷர கற்பம், 15. சிதம்பர கற்பம், 16. சிந்தாமணி மந்திரம், 17. சித்ஸபா கைங்கர்யஸ்வதந்திரசக்தி, 18. சித்ஸபா சம்புரோக்ஷண வித்தை, 19. சித்ஸபா சாம்புரோக்ஷண சூத்திரம், 20. சித்ஸபா சம்புரோக்ஷண கற்பம், 21. சித்ஸபா சம்புரோக்ஷண கவிதை, 22. சித்ஸபா சம்புரோக்ஷண பாஷ்யம் 23. ஸ்ரீ நடராஜ சகஸ்ராம ஸ்தோத்திரம், 24. சிதம்பர கவசம், 25. சிதம்பர தீக்ஷித ஸ்தோத்திரம், 26. சிதம்பராஷ்டகம், 27. நடேசாஷ்டகம், 28 நடேச ஸ்தோத்திரம், 29. நடேச சிந்தாமணி, 30. நடராஜ திக்பந்தனம், 31. சிதானந்தாஷ்டக ஸ்தோஸ்திரம், 32. சிதம்ரேஸ்வராஷ்டகம், 33. சிதம்பரேஸ்வர புஜங்காஷ்டகம், 34. சிதானந்த சாரம், 35. நடேச விஜயம், 36. பதஞ்சலி சரித்திரம், 37. சபாபதி விலாச நாடகம் என்னும் வடமொழி நூல்களிலும், தேவாரம், திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறைகளிலும், கோயிற் புராணம், சிதம்பர சபாநாத புராணம், தில்லைக்கலம்பகம், தில்லையுலா, சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட் கோவை, தில்லை ஸ்ரீ சிவகாமியம்மை இரட்டைமணிமாலை, புலியூர்வெண்பா, சிதம்பர வெண்பா, தில்லையமகவந்தாதி, ஸ்ரீ நடேசர்

திருவருட்பா, ஸ்ரீ நடராச சதகம், ஸ்ரீ நடராஜர் திருப் புகழ், ஸ்ரீ சிவகாமியம்மை பிள்ளைத் தமிழ், சிவகாமி யம்மை பதிகம், பரமரகசிய மாலை, அருட்பா, தில்லைத் திருவாயிரம்.

யாழ்ப்பாணம் ஸ்ரீ ஆறுமுக நாவலர் எழுதிய பெரிய புராண சூசனம், யாழ்பாணம் தெல்லிப்பளை சிவானந்த ஐயரால் இயற்றப்பட்ட புலியூர்ப் புராணம், சிதம்பர புராணம் இதற்கு பழைய உரை மூன்றுண்டு; யாழ்ப்பாணம் ஸ்ரீ ஆறுமுக நாவலரின் மாணவர் இராமலிங்கம் பிள்ளை யால் ஒரு புத்துரை செய்யப்பட்டிருக்கிறது.

மேலும் ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியார் இயற்றிய ஸ்ரீ நந்தனர், சரித்திரக் கீர்த்தனை, சிவசங்கர தீக்ஷதர் இயற்றிய கீர்த்தனைகள் ஆகியவை.

## முத்துத்தாண்டவர் சரித்திரம்

சீர்காழியில் மேளவாத்தியக்காரர் குலத்திலுண் டான ஸ்ரீ முத்துத்தாண்டவர் என்பவர் தம் சரீர நோயால் தன் தொழிலைச் செய்யமுடியாமல், ஸ்ரீ தோணி யப்பா சன்னதியில் சாதகாலமும், பக்திப் பாடல்களான தேவாரம், திருவாசகம் முதலியவைகளைப் பாடிக்கொண்டு. தோணியப்பாடம் அதிகமாக அன்பு செலுத்தி வந்தார் அவருக்கு வருவா யில்லாததனுல் கோயிலிலேயே யிருந்து கோயில் பிரசாதங்களைச் சாப்பிடுவதுதான் வழக்கம்.

ஒரு நாள் இரவு ஸ்ரீமுத்துத் தாண்டவருக்குக் சரியான படி உணவு கிடைக்காததனுல் பசியினுல் களைத்துக் கோயி லுள் பிரகாரத்திலேயே படுத்து நித்திரை செய்தார். கோயில் பூஜைகள் முடிந்ததும், யாரும் அவரைக் கவனிக்

காமல் கதவைப் பூட்டிக் கொண்டு போய்விட்டார்கள் பசியின் களைப்பினாலும், எப்பொழுதும் தனக்குள்ள நோய், தரித்திரம் இவைகளையே நினைத்துப் பெருமானையே பாடிக் கொண்டிருந்தாலும் அம்மையப்பராகிய ஸ்ரீ தோணியப்பரும் தாயும் வந்து ஸ்ரீ திருஞானசம்பந்தருக்கு ஞானப் பால் கொடுத்தருளியதுபோல், இவருக்கும் ஞானப்பால் அன்னமும் கொடுத்துக் "குழந்தாய், நீ தில்லைக்குப்போய், அங்குஸ்ரீ நடராஜரைப் பற்றி பாடு, உன் புறநோயும் நீங்கி, அகநோயும் நீங்கும்" எனத் திருவாய் மலர்ந்தருளினார்.

அதைக்கேட்ட ஸ்ரீ முத்துத்தாண்டவர் உலக மாதாவான அம்பிகையால் ஊட்டப்பட்ட பால் அன்னத்தைச் சாப்பிட்டதால் களைப்பு நீங்கிப் பெருமான் சொல்லியதைக் கேட்டு, ஆனந்தக் கூத்தாடி, கண்ணைத் திறக்கும்பொழுது, தான் இரவுகோயிலில் படுத்தது நினைவு வந்தது. பொழுது விடிந்து கதவு திறக்கும்வரை காத்திருந்து, கதவு திறந்ததும் கோயிலில் பூசை செய்யும் குருக்களிடம் நடந்தவைகளைச் சொல்லி, ஸ்னானம் செய்து, நித்திய கர்மாவை முடித்து, ஸ்ரீ தோணியப்பர் சந்நதி வந்து, பூமியிலே விழுந்து வணங்கிப், பெருமான் கனவில் சொல்லியபடி "தில்லைக்குப் போய், ஸ்ரீ நடராஜரைப் பாடத் தனக்கு ஒன்றும் தெரியாதே" என்று சுவாமியினிடம் சொல்லிக் கொண்டு, தில்லையை நோக்கிப் புறப்பட்டார்.

சிதம்பரத்தை யடைந்து சிவகங்கையில் ஸ்னானம் செய்து, ஸ்ரீ மூலநாதரையும் வழிபட்டு. 'பெருமான் சொல்லியபடி பாட வேண்டுமே, எப்படிப் பாடுவேன்' என்று கவலைப் பட்டுக் கொண்டிருக்கும் பொழுது, அங்கிருந்த பக்தர்களில் ஒருவர் 'பூலோக கைலாசம்" என்று உரக்கத்

தோத்திரம் செய்ய, ஸ்ரீ முத்துத்தாண்டவர் செவியில் பூலோக கைலாசம் என்னும் வார்த்தையைக் கேட்டவுடன் பெருமானின் அருளால், "பூலோக கைலாசகிரி சிதம்பரம் அல்லால் புவனத்தில் வேறுமுண்டோ" என்ற பாட்டைப் பாடினார்.

உடனே அவரின் உணவுச் செலவுக்காகப் படிக் காசும் சுவாமியின் சந்நதியில் கிடைத்தது.

ஸ்ரீ முத்துத்தாண்டவர் தனக்குப் பெருமானின் கருணையால் முதல் நாளில் பாடும்படி அருளிச் செய்தபடி தினமும் சந்நதியில் வந்து, எந்த வார்த்தை தன் காதில் முதலில் விழுகிறதோ, அதைக் கொண்டு பாடுவதும், பெருமானால் கொடுக்கப்படுகிற படிக்காசையும் பெற்று அதனால் சீவித்துக் கொண்டும், ஒவ்வொரு நாளும் சீர்காழிக்குப் போவதும், காலையில் சிதம்பரம் வந்து சந்நதியில் பாடுவதுமாக இருந்தார்.

பெருமான் அருளால் சில தினங்களில் சிதம்பரத்திற்கு வரும் பொழுது அனேக தடங்கல்கள் ஏற்படினும், ஸ்ரீ முத்துத்தாண்டவர் பெருமானை நினைத்து அந்தத் தடங்கல்களை அகற்றிக் கொண்டும், சில தினங்களில் பெருமானும் அவருக்காகத் தடங்கலை நிவர்த்தி செய்தும், தினமும் தவறாமல் பாடிக் கொண்டிருந்ததும் ஒரு நாள், ஜோதியான பரவெளியில் கலந்தார்.

அவர் எவ்வளவு நாள் எத்தனை பாட்டுக்கள் பாடினார் என்று அறியக்கூட வில்லை. ஆனாலும் கொஞ்சம் பாட்டுக் கள்தான் அச்சுப் போடப்பட்டிருக்கின்றன.

இவருடைய பாட்டுகள், பதங்கள் என்று நடனங்களுக்கு உபயோகப்படுகின்றன.

அண்ணாமலைச் செட்டியார் என்பவர் 'ஸ்ரீ நடராஜர் காவடிச் சிந்து ஒன்று பாடியிருக்கிறார், 'நடராஜப்பத்து' என்னும் பத்துப் பாட்டுக்களும் அனேகமாக ஸ்ரீ நடராஜரின் பக்தர்களுக்கும் தெரிந்திருக்கும். இதை இயற்றியவர் மணவாள முனுசாமி. இந்த விதமாக அனெக தமிழ் நூல்களிலும் காணலாம்.

இந்த க்ஷேத்திரத்தில் ஐந்தாவது பிரகாரமாகிய தேர் வீதியிலும், மற்றும் வெளியிலுள்ள வீதிகளிலும், எட்டுத் திக்கிலும் இந்திரன் முதலிய தேவர்களாலும், வசிஷ்டர் முதலிய ரிஷிகளாலும், பிரதிஷ்டைசெய்து, பூஜிக்கப்பட்டு வந்த சிவலிங்கங்களும் இருக்கின்றன. காலக்கிரமத்தில் சில இடங்களில் அவை மறைந்தன; சில இடங்களில் பூமியை வெட்டும்பொழுது பூமியிலிருந்து சில லிங்கங்கள் கிடைத்தன; சில இடங்களில் சிவலிங்க மிருந்த கோயிலில் ஸ்ரீ கணபதியோ வேறு மூர்த்தங்களோ இருக்கின்றன.

முன் ஒரு காலத்தில், சிவனுக்கும் ஸ்ரீ சக்திக்கும் வாக்குவாதம் ஏற்பட்டு, இருவரும் நடனம் ஆடினார்கள். அந்த நடனத்தில், ஸ்ரீ சிவன் ஒரு காலைத் தூக்கி ஆட, ஸ்ரீ சக்தி தன் காலைத் தூக்கக்கூடாத காரணத்தால் காலைத் தூக்கி ஆடவில்லை அதனால் ஸ்ரீ சக்தி, சிவத்திடம் பணிய நேர்ந்தது. உடனே "நீ எல்லைக்குள்ளிருக்கக் கூடாது" என்று வெளியிலிருக்க வைத்தார். அந்தக் கோயில்தான் இந்த க்ஷேத்திரத்தின் வடக்குப் பக்கத்தில் ஸ்ரீ தில்லைக் காளிக் கோயில் என்றும் ஸ்ரீ தில்லையம்மன் கோயில் என்றும் சொல்லப்படுவது.

உக்ரமான ரூபத்தோடு தில்லைக்காளி என்ற பெய ருடனும், சாந்தமான ரூபத்தோடு பிரமசாமுண்டி என்றும் ஸ்ரீ தில்லையம்மன் என்னும் பெயருடனும் ஸ்ரீ சக்தி காட்சி தருகிறாள்.

அப்படிக் காளியுடன் ஒரு காலைத் தூக்கி ஆடிய மூர்த்தியே ஸ்ரீ நடராஜரின் கொடி மரத்திற்குத் தெற்குப் பக்கத்திலுள்ள நிர்த்த சபையிலிருக்கும் ஊர்த்துவ தாண்டவர்.

இவருக்கு, வேதத்தை நன்றாக அறிந்தவரான ஸ்ரீ பிரணதார்த்திஹரகனபாடிகள் என்பவர், சமீபத்தில் தான் இறக்கும்பொழுது செய்து வைத்த ஏற்பாட்டின்படி ஊர்த்துவதாண்டவருக்கு வெள்ளிக் கவசம் செய்து சாத்தப்பட்டது.

மற்றும் எல்லாச் சந்நிதிகளிலுமுள்ள மூர்த்தங் களுக்கும் தங்கம் வெள்ளிக் கவசங்களிருக்கின்றன. ஸ்ரீ முக்குறுணி விநாயகருக்கு மட்டும் வெள்ளி கவச மில்லாதபடியால் அதைச் செய்ய பொது தீக்ஷிதர்கள் முயற்சியால் பலருடைய நன்கொடையைக் கொண்டு கிரீடம் செய்து முடிக்கப்பட்டது. மற்ற அவயங்களுக்குச் செய்ய வேண்டும்.

தீக்ஷிதர்களில் உமாபதி சிவத்துக்கும் பிற்காலத் திலும் வேதமூர்த்தி தீக்ஷிதர், மந்திரமூர்த்தி தீக்ஷிதர்கள் என்ற பெரியோர்கள் ஸ்ரீ வித்யா உபாஸகர்களாயிருந் தனர். சிவசங்கர தீக்ஷிதர் என்பவர் சங்கீதத்தில் வல்லவர் ஸ்ரீ பரமேஸ்வர தீக்ஷிதர் என்பவர் வேதங்களையும் கோயிலுக்குள்ள ஸ்ரீ பதஞ்ஜலி சூத்ர முதலியவைகளையும்

நன்குணர்ந்து. சிதம்பரத்தவ நிர்ணயம், புண்டரிகபுர மஹாத்மியம், ஸ்ரீ சபாபதிவிலாச நாடகம் முதலியவை களையும் வெளியிட்டார். வ்யாகரண சாஸ்திரத்தில் ஸ்ரீ பதஞ் ஜலியின் அவதாரம் என்று சொல்லக் கூடியவர்களும். மஹாமஹோபாத்யாயர் என்ற விருதுள்ளவர்களும் தென் இந்தியாவிலும், வடஇந்தியாவிலும்கூட அனேக சிஷ்யர்களை உண்டாக்கினவர்களாயுமுள்ள ஸ்ரீ சிவதண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதர் அவர்களாலும், அவருடைய சினேகிதர் ஸ்ரீ ஆனந்த தாண்டவ தீக்ஷிதர் அவர்களாலும், வேத மூர்த்தியாகிய ஸ்ரீ ஞானமூர்த்தி தீக்ஷிதர் அவர்களாலும், இப்பொழுதிருக்கும் (ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியாரால் செய்யப்பட்ட ஸ்ரீ குஞ்சிதாங்கிரிஸ்தவம் என்ற வட மொழி நூலை வெளியிட்ட) ஸ்ரீ க. மீ. ராஜா கணேச தீக்ஷி தர் அவர்களாலும் (ஸ்ரீ ராஜா சோமசேகர தீக்ஷிதர் அவர் களாலும்) இன்னும் சங்கீதம், மற்றும் வித்தைகளிலும் சமர்த்தர்களாலும், இந்த ஸ்ரீ நடராஜர் கோயில் பூஜை, மானேஜ்மெண்ட் முதலியவைகளை உலகம் வியக்கும்படி ஸ்ரீ பொது தீக்ஷிதர்கள் என்றும் நடத்திக் கொண்டு வருகிறார்கள்.

இங்கு தினமும் எப்பொழுதும் வேதம் ஓதிக் கொண்டேயிருப்பார்கள். திரிவேத பாராயண சபை மூலம் தினமும் காலையில் ரிக், யஜுர், சாம வேதபாரா யணம் நடந்துவருகிறது.

சகல கலைகளும் உற்பத்தியான ஸ்ரீ நடராஜரின் கோயிலுக்கு சமீபமாகிய திருவேட்களம் என்னுமிடத்தில் தான், சகல கலைகளும் பயிலக் கூடியதான அண்ணாமலை சர்வ கலாசாலை ஏற்பட்டிருக்கிறது.

நகரத்திலும் ஸ்ரீ ஆறுமுக நாவலர் உயர் தரத் தமிழ்க் கல்லூரியும் ஸ்ரீ ராமஸ்வாமி செட்டியார் உயர்தரக் கல்வி நிலையமும், இன்னும் பல கல்வி நிலையங்களும் இருக்கின்றன. குடி தண்ணீர் வசதியும், குளிக்கக் குளங்களும், இந்த ஊரைப்போல் எங்குமில்லை. கோடைக் காலத்திலும் குளங்களில் தண்ணீர் உண்டு; சிறிய வாய்க்காலிலும் உண்டு. மற்றும் போக்குவரத்து வசதிகளும், பல யாத்ரீகர்கள் வந்து தங்குவதற்கு பல மடங்களும், சத்திரங்களும் இருக்கின்றன. ஆனால் கொஞ்ச காலமாக தர்ம ஸ்தாபனங்கள் அந்த இடங்களை வாடகைக்கு விட்டு விட்டதால் வருகிற யாத்ரீகர்கள், வேறு இடங்களில் வாடகை கொடுத்துத் தங்கவேண்டி யிருக்கிறது.

அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம் என்னும் திருநாவுக்கரசர் வாக்குப்படி இன்றும், இங்கு யாவரும் உணவுக்குக் குறைவு இல்லாமல் இருக்கிறார்கள்.

ஓம்

ஸர்வம் சிவமயம்



# ஸ்ரீ சபாநாதர் பேரில் பாடிய
# பிரம்மஸ்ரீ சிவசங்கர தீக்ஷிதர்
# கீர்த்தனங்கள்

## சபாநாதர் கீர்த்தனம்

*இராகம் - கல்யாணி, சாப்பு தாளம்.*

**பல்லவி**

*கண்டாற்போதுமையா ஒருதரங் கண்டாற்*

**அநுபல்லவி**

*அண்டம்புகழுந்தில்லை அம்பலந்தனிலென்றுந்*
*தொண்டர்மகிழவாடித் துலங்குஞ்சபாபதியைக்*

**சரணங்கள்**

*தென்திசைநோக்கியே விளக்குந்தேவனைப்பார்த்து*
*தெரிசித்துமறவாமல் தினந்தோறுமேபோற்று*
*கொன்றைமலரணையுங் கொற்றவனூர்கூத்து*
*கோவிந்தன்போற்றுஞ் சிதம்பரம்வந்துகாத்து (கண்)*

*சண்டனையுதைத்து மார்க்கண்டனையுமாண்டு*
*சாருமடியார்தங்கள் கவிகளெல்லாம்பூண்டு*
*மன்றுள்வாழ்நாதற்கு மனதுக்கேற்கவின்று*
*மகிதலம்தனில்நன்றாய் மகிழ்துசெய்துதொண்டு (கண்)*

*வண்டுகுழலிசிவ காமியாள்நேசனை*
*வாகவிதுதிசெயும் புலியூரில்வாசனை*
*புண்டரீகபுரத்தில் புண்ணியசபேசனை*
*பூசுரர்மூவாயிரர் பூசிக்குமீசனை (கண்)*

## இராகம் - கமாஸ் - ஆதிதாளம்

### பல்லவி

அலையாதேநெஞ்சே அலையாதேநெஞ்சே

### அநுபல்லவி

அலையாதேநெஞ்சே சொன்னேன் யனியாயமாகவேநீ
மலையான்மகள்மகிழும் மகாராஜனைமறந்து

### சரணங்கள்

பக்தியுடனுகந்து
நத்திமன்மகிழ்ந்து
பரமசிவத்தைவந்து
நாடாமலே நீ (அலை)

சொல்லும்பொருளுமற்ற
அல்லும்பகலும்பார்த்து
சோதிமணிவிளக்கை
அனுபவியாமல் (அலை)

தில்லைமூவாயிரவர்
நல்லதிருவடியை
தினந்தோறும்போற்றிசெய்யும்
நாடிநீசேராமல் (அலை)

இ - ம் பியாக்கடை - சாப்புதாளம்

பல்லவி

என்ன யோசனை செய்கிருய் மனமே
நீ என்ன யோசனை செய்கிருய்

அநுபல்லவி

தன்னிகரில்லாத தலமென்னுந்தில்லையில்
தாண்டவமாடிய ஆண்டவனைமறந்து (என்)

சரணங்கள்

அன்னகயகோச மானசரீரத்தை
ஆசையுடனேநம்பி யனுபவியாதேயித்தை
பொன்னம்பலவாணர் பொதுவிலாடும்பாதத்தை
புத்தியுடனேநன்ருய்ப் போற்றித்துதித்துகந்தே (என்)

மின்னற்கொடையிடையாள் சிவகாமிபாகனை
மிதித்துமுயலகன்மேல் நடுத்திடும்பாதனை
சொன்னதலங்களெல்லாம் நிறைந்திடும்தேவனை
சொந்தமாயனுதினஞ் சார்ந்திடும்நீயனை (என்)

அன்னவாகனனயன் மாலுமறியாத
அம்பலவாணரை னுதினம்பிரியாதே
முன்னோர்துதிசெய்யும் மூவாயிரவர்வேத
முனிவர்பூசிக்குமெங்கள் முன்னவனைப்பாடாமல் (என்)

இ-ம் - அடாணு - சாப்புதாளம்

பல்லவி

மோசம்போகவேண்டாம் மனமேநீ
மோசம்போகவேண்டாம்

அநுபல்லவி

நாசஞ்சரீரத்தை நானென்றுநாடியே
ஆசைவலையில்வீழ்ந்து அலைந்துநீயறியாமல் (மோச)

சரணங்கள்

பாசமறுத்துன்னைப் பதமாய்வைப்பார்சொன்னேன்
பாவிநமன்வந்து பற்றிப்பிடிக்குமுன்னே
தேசம்புகழுந்தில்லைத் திருச்சிற்றம்பலந்தன்னை
தினந்தோறுமறவாமல் தெரிந்துஜெபித்துன்னை (மோச)

அன்புடன்வந்துநீ ஐயனடிபணிந்து
அரஹரசிவாவென்று யதிலேமனமகிழ்ந்து
தென்புலியூரினில் தேவனருகில்வந்து
திரைக்குள்பொருளறிந்து பிறப்பறுக்கமறந்து (மோச)

நல்லகதிபெறவே நான்சொன்னபடிநாடு
நாய்போலலைந்துநீ நாள்கழிக்கின்றாய்கோடு
தில்லையந்தணர்போற்றுந் திருவடிதன்னைநாடு
தீராவினையைத்தீர்க்குந் திருச்சந்நிதியிற்பாடு (மோச)

# சிவகாமி அம்மன் பேரில் கீர்த்தனம்

இ - ம் - கல்யாணி - சாப்புதாளம்

**பல்லவி**

அன்னைசிவகாமி யடியிணையைமனமே அனுதினமறவாதே

**அநுபல்லவி**

செந்நெல்விளைந்திடுஞ் சிதம்பரந்தனிலாடும்
சிற்சபைநடராஜர் சித்தமகிழ்ந்துகூடும் (அன்)

**சரணங்கள்**

பொன்னம்பலவாணர்க்குப் பாருந்தச்செய்வாள்பணி
புவனமெங்குமொன்றாய் நிறைகதபரிபூரணி
என்னவேண்டுவதெல்லா மீந்திடுங்காரணி
ஏழையடியார்க்கன்பா யிரங்குமனோன்மணி (அன்)

தில்லைப்பதியில்வாழும் கல்யாணிருள்புரி
திருவடியடைந்தோர்க்குக் கிருபைசெய்யுமுபகாரி
நல்லகதிகொடுப்பாள் நான்சொன்னதுஞ்சரி
நாள்தோறுமறவாமல் நம்பியனுசரி (அன்)

என்னை ரக்ஷியம்பா ளென்றுபணிந்துநாடு
எங்கள்மாயன்சோதரி ஈஸ்வரியைக்கொண்டாடு
சொன்னதமிழ்மாலையால் சுந்தரிதன்னைப்பாடு
சுரர்மூவாயிரவர்போற்றும் சோதிஅடியைத்தேடு (அன்)

